# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு




சிலம்பு 15 தாது - ஐப்பசி 1936 பரல் 3

## பொருளடக்கம்



---



திருநெல்வேலி, இந்துகலாசாலைத் தலைமைத் தமிழ்ப்
பேராசிரியராயிருந்து காலஞ்சென்றவரும்
அறிவுரைத்திரட்டு ஆசிரியருமாகிய

**தி. பா. சிவராம பிள்ளையவர்கள்**

ஓம்
# செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு-கரு] தாது—ஐப்பசி [பரல்-ஙு

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்

### திருச்சாய்க்காடு

மங்குறோய் மணிமாட மதிதவழு நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்
கொங்குலா வரிவண்டி னிசைபாடு மலர்க்கொன்றைத்
தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே.

பதவுரை :—

மதிதவழும்—திங்கள் தவழும்படியாகவும்,

மங்குல்தோய்—மேகந் தொடும்படியாகவும்,

மணிமாட நெடுவீதி—(அவ்வளவு உயரமாயுள்ள) அழகிய வீடுகள் (இரு பக்கங்களிலும் நெருங்கியிருக்கின்ற) நீண்ட தெருக்களை உடைய தாயும்,

திரை—அலைகள்

சங்கு எல்லாம் கரைபொருது புலம்பும்—சங்குகளை யெல்லாம் கரையில் மோதி ஒலிசெய்கிற (கடலருகிலுள்ளதாயுமிருக்கிற),

திருச்சாய்க்காட்டான்—திருச்சாய்க்காட்டில் வீற்றிருக்கிறவனும்,

வரிவண்டின் இசைபாடும்—வரிகளையுடைய வண்டுகள் இசையோடு பாடுகின்ற,

கொங்குஉலா கொன்றை மலர்த்தொங்கலான்—மணம்பொருந்திய கொன்றைமாலைகளை அணிந்திருக்கிறவனுமாயுள்ள சிவபெருமானுடைய

*அடியார்க்கு—அடியார்களுக்கு,*
*சுவர்க்கங்கள்—துறக்க உலக இன்பங்கள்,*
*பொருளல—தாங்கள் அடையவிரும்பும் பொருள்களல்ல.*

விளக்கவுரை :—

*சங்கு எல்லாம் 'கரை பொருது திரைபுலம்பும்—புலம்பும் என்ற சொல்லுக்குப்பின் கடல் என்ற சொல்லை வருவித்துப் பொருளாக்கப்பட்டது ; சொல்லெச்சம்.*

*பொருதல்—மோதல்.*

*சுவர்க்கங்கள்—சுவர்க்கம் என்பது துறக்க உலகம். அஃது இங்கே ஆகுபெயராய்த் துறக்க உலக இன்பங்களைக் குறிக்கின்றது. துறக்க உலகத்தில் உயிர்கள் நுகரும் இன்பங்கள் தாம் தாம் செய்த பலவகைப் புண்ணியங்களுக்குத் தக்கவாறு இருத்தலால் 'சுவர்க்கங்கள்' என அடிகள் பன்மையிற் கூறினார்.*

*என்றும் நிலையாயுள்ள சிவபோகம் அடையக்கருதும் சிவனடியார்களுக்கு சில காலத்தில் அழிவனவாகிய சுவர்க்க போகங்கள் விரும்பத்தக்க பொருள்களல்ல. ஆதலின் 'பொருளலவே' என்றார். ஏ-அசை.*

*அடியார்களுக்குத் துறக்க உலக இன்பங்கள் தாம் அடைய விரும்பும் பொருள்களல்ல என்றதனால் துன்பங்களோடு கூடிய உலக இன்பங்கள், பொருள்கள் அல்ல என்பது சொல்லாமலே விளங்கும்.*

*இப்பாட்டில் சிவனடியார்கள் விரும்பத்தக்கது சிவபோகம் ஒன்றே என்பது கூறப்பட்டது.*

— மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

## சித்திரக்குள்ளன்

*"உலகத்திலேயே மிக்க குள்ளமான மனிதன் துருக்கி வம்சத்தானை ஹூசேன் பே என்பவன். இவன் 14 அங்குலம் உயரமுள்ளவன் ; வயது 36."* ('விடுதலை')

# புதுக் கவிகள் -Original Poetry

## தமிழர் கடமை

[கோடேமுடி வித்வான் பே. கோவிந்தன் அவர்கள்]

உண்ணுமுண வாடையிடம் உணர்வுதவும்
உதவியேமே லுதவி ; நன்றி
எண்ணியொன் றுக் கெழுநூறும் இயற்றுஞ்செந்
தமிழ் நாட்டீர் ! இசையின் மிக்கீர் !
தண்ணளியோ டவையுதவுந் தமிழ்த்தாய்க்கும்
நாட்டினுக்குந் தலைமை சான்ற
பண்ணமரும் பாமாலை பூமாலை
பலசூட்டிப் பணிகு வீரே. (1)

வெள்ளநெருப் பரசுபகை கள்வர்களால்
பொருட் செல்வம் வீயும் ; மாசு
தள்ளியுயிர்க் குறுதிகொளுந் தமிழ்நாட்டீர் !
தண்ணளியுஞ் சால்பும் மிக்கீர் !
கொள்ளுகின்றார்க் கெந்நாளுங் கொடுக்கின்ற
தமிழ்த்தாயைக் குறுகி உள்ளக்
கள்ளமறுத் தெழுமைக்கு முதவுங்கல்
விச்செல்வங் கைக்கொள் வீரே. (2)

அணியழகும் உடையழகும் உறுப்பழகும்
அழகாகா ; அழகு மிக்குப்
புணர்பொருள்கண் டுவப்பெய்துந் தமிழ்நாட்டீர் !
மாசகத்தும் புறத்து மில்லீர் !
பணமுடைய மாந்தர்களும் உறுப்புநலம்
படைத்தோரும் பணிந்து நோக்கும்
அணியமருந் தமிழ்க்கல்வி அழகுடைய
ராய்ப்புகழும் அடைந்து வாழ்மின். (3)

ஒன்றினோடொன் றொவ்வாத அறுசுவையும்
நோய்செய்யும்; உறுநோ யின்றி
என்றுமிவண் உயிர்வாழ எண்ணுஞ்செந்
தமிழ்நாட்டீர்! ஏத மில்லீர்!
தொன்றுதொட்டுங் கொன்றிவரும் உள்நோயைக்
கெடுத்துயிரைத் தூய்மை செய்யும்
தென்றமிழ்த்தே னுண்டுண்டு தெளிவெய்திச்
செம்மாந்து திரிகு வீரே. (4)

பொன்றாத பொருளில்லை புகழொன்றே
நின்றுலவும்; புவியின் மீதே
குன்றாத புகழ்வாய்ந்த தமிழ்நாட்டீர்!
அருள்மிகுந்த குடியில் வந்தீர்!
நன்றாகுந் தொண்டுபல தமிழ்த்தாய்க்கும்
நாட்டினுக்கும் நாளுஞ் செய்து
பொன்றாத புகழ்நிலவப் புலவர்களால்
புகழ்மாலை புனைவிப் பீரே. (5)

உறுப்பொத்த லால்மக்க ளாகின்றார்
என்றுரையா துலகம்; பண்பின்
சிறப்பியல்பால் பொருட்குயர்வு தெரியுஞ்செந்
தமிழ்நாட்டீர்! செம்மை சான்றீர்!
அறத்திறனால் பொருள்தேடி அன்பாலின்
பந்துய்க்க அரிய கல்வி
பெறற்குரிய கேள்விகளால் செந்தமிழ்நூ
லறிவெய்திப் பெரிய ராமின். (6)

பெரியவரைப் பேணாமை பேதைமையிற்
பேதைமையாம்; பெரியார் தங்கட்
கரியபல தொண்டுசெயுந் தமிழ்நாட்டீர்!
அறிவொழுக்கம் ஆற்றல் மிக்கீர்!
தெரியவரும் அறிஞர்களுக் கறிவுமுர
வோர்க்குரமும் செல்வர்க் காக்கம்
வருநெறியுந் தெரிவிக்குந் தமிழ்க்கன்னி
நெறிப்பட்டு வாழ்க்கை செய்மின். (7)

வானுலகம் நிலவுலக வாழ்க்கைமாண்
பாலாகும் ; மானம் நீங்கின்
ஊனுடலோ டுயிர்வாழ்தற் கிசையாத
தமிழ்நாட்டீர் ! ஒழுக்கம் மிக்கீர் !
தேனனைய மொழியால்நன் னெறிகாட்டுந்
தமிழ்த்தாய்க்குச் சிறுமை தோன்றின்
மானநுமக் கழியாதோ வானுலகம்
புகுவீரோ மானங் காமின். (8)

பிள்ளைகளுக் குயர்தெய்வம் பெற்றெடுத்த
தாயரென்பர் ; பெற்ற தாயர்
உள்ளமகிழ் வுறத்தொண்டும் உதவியுஞ்செய்
தமிழ்நாட்டீர் ; ஊக்கம் மிக்கீர் !
தெள்ளமுத மனையமொழித் தமிழ்த்தாயை
வணங்காமை தீமை யாகும்.
கள்ளமிகும் பகைவர்செயும் இடர்க்குளகப்
படுத்தாமல் காவல் செய்மின். (9)

வேற்றுமையால் சிறுபயனும் விளையாது ;
வேற்றுமையை விரும்பிப் பூசல்
ஆற்றஇசை யாதடங்குந் தமிழ்நாட்டீர் !
ஆண்மையுநல் லறிவும் மிக்கீர் !
ஏற்றமிகும் வண்ணமழ கணியமரும்
தமிழ்த்தாயின் இசையைப் பாரின்
நாற்றிசையும் ஏற்கும்வணம் ஒற்றுமையால்
வள்ளுவர்போல் நவிலு வீரே. (10)

---

## இருநூறுண்டு சென்ற பெரியார்

இமயமலைக் குகைகளொன்றில் வாழும் சமாதிநாதர் என்ற பெரியார் இலண்டனில் நடக்கப்போகிற முடிசூட்டு விழாவிற்குப்போக எண்ணியுள்ளாராம். அவருக்கு வயது 200 ஆகிவிட்டதாம். உலகில் வழங்கும் எல்லா மொழிகளிலும் அவருக்குப் பயிற்சியுண்டாம்.

—"லோகோபகாரி"

# இலக்கணமும் இலக்கியமும் :
# LANGUAGE AND LITERATURE

## வடசொல்லென மயங்குந் தொல்காப்பியத் தென்சொற்கள்

[பண்டித ஞா. தேவநேயப் பாவாணர்]

### 1. படிமை.

உலகத்திலுள்ள மக்களெல்லாம் ஒருதாய் வயிற்றின ரென்று சரித்திர ஆராய்ச்சியால் தெளிவாகின்றது. தமிழர், தெலுங்கர், கருநடர், மலையாளர், துளுவர் முதலிய திராவிட வகுப்பினரெல்லாம் எங்ஙனம் ஒரு காலத்தில் ஒரு வகுப்பின ராயிருந்தனரோ, அங்ஙனமே துரேனியர், சேமியர், ஆரியர் என்னும் முப்பெருங்கிளையினரும் ஒரு காலத்தில் ஒரே வகுப் பினராயிருந்திருக்கின்றனர். மக்கள் வகுப்புத் திரியத் திரிய அவர்கள் மொழியுந் திரிந்துகொண்டே வந்திருக்கின்றது. படைப்புக் காலந்தொட்டு ஒரு வகுப்பார் பிறவகுப்பாருடன் கலவாது பிரிந்திருந்தாலொழிய அவர்கள் மொழி தனிமொழி யாயிருத்தல் எட்டுணையும் கூடாதாகும். பெற்றோர் மொழி களையே பிள்ளைகளும் பேசுகின்றனர். உறவினரெல்லாம் ஒரு மொழியே பேசுதல் இயல்பு. ஆகவே இயைபுடைய வகுப் பினரெல்லாம் இயைபுடைய மொழிகளையே பேசல் வேண்டும் சமஸ்கிருத ஆரியர் மூவகை மொழிகளும் கலக்கின்ற மேலை யாசியாவின் வடபுறத்தில் ஆதியிற் குடியிருந்தனர். அங் கிருந்து அவர்கள் வடஇந்தியாவிற்கு வருமுன்னரே அவர்கள் மொழியில் பிறமொழிச் சொற்கள் எண்ணிறந்தன கலந்துவிட் டன. ஆரிய வருகைப்போது இந்து தேய முழுதும் வழங்கி வந்தவை திருந்தினவும் திருந்தாதனவுமான திராவிட மொழி களே. ஆரியர்கள் வடஇந்தியாவிலிருக்கும்போது பல திரா விடச் சொற்களும் தென்னாட்டிற் குடியேறிய பின் வேறு பல திராவிடச் சொற்களும் சமஸ்கிருதத்திற் கலந்துவிட் டன. தமிழ்க்கல்வி தலைதாழ்த்துச் சரித்திர அறிவும் மொழி நூலாராய்ச்சியும் இல்லாத இடைக்காலத்து, சமஸ்கிருதமே இந்தியமொழிகட்கெல்லாம் தாய் என்னுமோர் படிற்றுரை தமிழ்ப் பகைஞரால் தமிழ் நாட்டிலும் பரப்பப்பட்டது. சமஸ்கிருத அகராதியிலுள்ள சொற்களெல்லாம் சமஸ்கிரு தமே யென்னுங் குருட்டு நம்பிக்கை தமிழருள்ளத்திலும்

குடிகொண்டது. மேனாட்டுக் கலைச்சுடர் மேம்பட்டுத் திகழும் இக்காலத்துங்கூடப் பல தூய தென்சொற்களை வடசொல்லென மயங்குகின்றனர் பேரறிஞராயினும். தமிழ், உலகத் தாய்மொழியின் இயற்கை வடிவும் சமஸ்கிருதம் அதன் செயற்கை வடிவுமாதலின், அவ்விருமொழிக்கும் பொதுவான சொற்களுள், தமிழில் மூலப்பொருள் தருவனவெல்லாம் தமிழென்றே பெரும்பாலுங் கொள்ளற்பாலன. சமஸ்கிருதம் என்னும் பெயரே 'நன்றாய்ச் செய்யப்பட்டது' என்று பொருள்படுதலின் சமஸ்கிருதத்தின் செயற்கையை யுணர்த்தும்.

தமிழிற் பிற்காலத்து வடசொற்கள் பெரிதுங் கலந்திருப்பினும் பண்டைத்தமிழ் நூல்கள் அத்துணைக் கலப்பினவல்ல. காலத்திற் பின்னோக்கிச் செல்லச் செல்லத் தமிழ் நூல்களில் வடசொல் வழக்கு அருகிக்கொண்டே செல்லும். இற்றை முழுத்தமிழ் நூல்களுள் முன்னையது தொல்காப்பியமாதலின் அதில் வந்துள்ள வடசொற்கள் ஆசை, வைசியர் போன்ற ஐந்தாறேயாகும். வடசொல்லென மயங்கும் அதன் பிற சொற்களெல்லாம் தூய தென்சொல்லே யாதல் வெள்ளிடைமலை. ஆயினும் ஆராய்ச்சி யில்லார்க்கு அறிவிப்பான் வேண்டி அவற்றை முறையே ஒவ்வொன்றாயெடுத்து மொழிநூற்படி விளக்குவாம்.

படிமை :

"பல்புகழ் நிறுத்த படிமை யோனே"

(தொல். பாயிரம்)

"மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய"

(தொல். அகம். 30)

படிமை என்னுஞ் சொல் படி என்னும் வினையடியாகப் பிறந்தது. படி என்பது படு என்பதன் மறுவடிவம். இவ்விரண்டும் பட் என்னும் ஒலிக்குறிப்பினின்றும் தோன்றியவை.

படுதல்=படிதல்=i. வீழ்தல். ii. ஒலித்தல்.

வீழ்தற்பொருளின் அடிப்படையாகப் படி என்பதனின்றும் பல கருத்துக்களும் சொற்களும் பிறக்கும்.

படிதல்=1. விழுதல்: கீழ்த்தங்கல், நிலைபெறுதல், பழகுதல், பேசி முடிவாதல். (உ-ம்.) விலை படிந்தது.

2. விழுதல்—ஒருவரின் அடிவணங்கல், அடிப்படுதல், கீழ்ப்படிதல், தாழ்மையாயிருத்தல்.

3. விழுதல்: சாய்ந்து அல்லது மடங்கி விழுதல், நிலத்தில் அல்லது உடம்பிற் படுதல்.

(உ-ம்.) பயிர் நிலத்திற் படிந்திருக்கிறது.
சடை நாயின் உரோமம் நிலத்திற் படிகிறது.
மயிர் தலையிற் படிந்திருக்கிறது.
பன்றியின் வயிறு நிலத்திற் படிகிறது.

4. விழுதல்: ஒன்றில் ஒன்று விழுந்து அதன் உருவம் அமைதல்.

படி (பெயர்)=ஒன்றிலொன்று விழுந்ததனாலான உருவம், அதன் வடிவம், அளவு, மாதிரி, வகை.

படி=1. a Copy (உ-ம்.) படியோலை opposed to மூலவோலை "மூட்சியிற் கிழித்தவோலை படியோலை மூலவோலை" (தடுத்தாட்கொண்ட புராணம்)
an article, உருப்படி.

2. அளவு (பொது) grade. படிப்படியாய், வாயிற்படி, படிக்கட்டு, படி, படிக்காசு.
நிறை—படிக்கல்.
முகத்தல்—ஒரு படி, படியளக்கிறவன்=காக்கிறவன்.
படி=bata, allowance.

3. விதம் அல்லது வகை.

அப்படி, இப்படி, எப்படி, அதன்படி, சொன்னபடி, மேற்படி.

"எல்லாப் படியாலும் எண்ணினல் இவ்வுடம்பு" ஔவையார்.

சொன்னபடி கேளாதவன்.

எனக்கொரு படியாய் வருகிறது. படியாய்—வடியாய். (போலித் திரிபு)

4. Form. படி+வு=படிவு +அம்=படிவம் (ப—வ போலி) Eng. body; Ang.-Sax. bodig; Hind. **बदन**.

படி—(n.) copy. duplicate, anything of equal value, exchange, answer, return, substitution.
படி—படில் cf. குடி—குடில், விட்டி—விட்டில்
படில்—பதில்—வதில் (corruption)
பதில்=return, answer, substitution.
பதிலாள்=substitute பதிலாளி=representative.

படி என்னும் சொல்லே வடமொழியில் ப்ரதி (प्रति) என்றாகும். வடசொற்களின் மெய்ம்முதல்களை ரகரம் சேர்த்தெழுதுவது பெருவழக்கு.

(உ-ம்.) பவளம்—ப்ரவாளம் (प्रवा (वा) लः) தமிழம்—த்ரவிடம் (द्रवः)

ட—த. cf. படாகை—பதாகை. படி—ப்ரதி.

ப்ரதி என்னும் சொல்லுக்கு வடமொழியில் மூலமில்லை. ப்ரதி என்னும் உபசர்க்கம் பெற்று, ப்ரதிநிதி (प्रतिनिधिः) என்னும் பெயருண்டாகும்.

படி. (v. imp.)=விழு.

படி—வடி. to fall down, to filter, to select—வடிகட்டுதல். to cast, as moulten metal—வடித்துச் செய்தல். to abate, as water—நீர்வடிதல். to hang low, as the lobe of the ear-காது வடிதல்.

படி—பதி (v. imp.)—to fall, to make impression on the mind, to be comprehended, to be memorised-மனதிற் படியவில்லை, மனதிற் பதியவில்லை.

பதி=to fall down, to settle down, to dwell-பதிதல்—வதிதல்=தங்குதல், வசித்தல்.

பதி=(N.) An abode, a town.

"பதிபெயர் விளைதல்" (அகப்பொருள்), காசியம்பதி.

Eng. Abide (v.) a+bide; bide=to wait
A. S. abidan=a+bidan, bidan=to wait.

பதி—bide. cf. மதுரை—Madura.

Abode (n.) from abide.

Hind. Ahamad*abad*, Allah*abad*.

இவற்றில் abad என்று பிரித்து (आबाद), நிர்மாணிக்கப்பட்ட என்று பொருள்கூறுவது சிறப்பாய்த் தோன்றவில்லை. "इलाहाबाद இலாஹியால் நிர்மாணிக்கப்பட்ட, हैदराबाद ஹைதரால் நிர்மாணிக்கப்பட்ட"—ஹிந்தி தமிழ் ஸ்வபோதினி.

பதி=to register; பதிவு=impression, registration, to make impression.

பதிப்பு=printing, edition. அச்சிற் பதித்தல், பதிப்பித்தல்.

பதிபோடு—to crouch, to transplant.

பதியம் போடுதல் அல்லது வைத்தல்—to transplant a cluster of saplings, to graft, to heap up cowdung in a regular shape.

பதி—to sink in, to print; பதி+அம்=பதம் (1) கால் (2) நிலை.

பதி+அம்=பாதம், foot (முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற்பெயர், ஆகுபெயர்).

cf. படி+அம்=பாடம்.
தவி+அம்=தாவம், தாகம்.
கொள்+தல்=கோடல்.
செல்+தல்=சேறல்.

Eng. foot; A. S. fot; L. pedis; Gr. podos; Sans. पादः
L. pedis—pedal, pedestrian, pedestal.
Gr. podos—tripodstand.
பாதம்—பாதை; Telugu பாட்ட; Eng. Path.

Sans. पादः—पादप, the root of a tree, a tree.
Eng. Botany, Lit. the science of trees.

படி—பாடி, a cluster of low-roofed huts, a military encampment.

படி=form, image, likeness.
படி+மை=படிமை. மை an abstract noun suffix.
cf. அடி+மை=அடிமை; குடி+மை=குடிமை.

படிமை—1. Form, Image.
2. Appearance.
3. Robe of an ascetic.
4. Religious conduct of an ascetic.

படிமை—(பதிமை)—பதுமை.

இகரம் உகரமாய்த் திரிவது பெரும்பான்மை.

(உ-ம்.) பிள்ளை—புள்ளை
பிட்டு—புட்டு
பிண்ணாக்கு—புண்ணாக்கு
பிடு—புடு
} இழிந்தோர் வழக்கு

இழிவழக்கேனும் உயர் வழக்கேனும் சொற்றிரிபு விதி ஒன்றே. உயர் வழக்காயின் கொள்ளப்படும்; இழி வழக்காயின் தள்ளப்படும். இதுவே இவை தம்முள் வேற்றுமை,

(உ-ம்.) கொள்ளப்படுவன தள்ளப்படுவன
அ-எ பரு—பெரு (கத்தரிக்காய்)—கெத்தரிக்காய்
ப-வ பதி—வதி (பதில்)—வதில்

படிமை என்னும் சொல்லே வடமொழியில் ப்ரதிமா (प्रतिमा) என்றாகும். வடமொழியில் ப்ரதி என்ற சொற்கு மூலமில்லை. மா என்பது பண்புப்பெயர் விகுதியன்று. ப்ரதிமா, அணிமா, மகிமா முதலிய மாவீற்றுப் பெயர்களையெல்லாம் பகாப்பதங்களென்றே கொள்ளுவர் வடநூலார்.

வடவெழுத்துத் திரிபைக் கூறுஞ் சூத்திரத்து 'ஆவீறை யும்' என்றார் பவணந்தியார். வடமொழி யாகாரம் தமிழில் ஐகாரமாவது போன்றே, தமிழ் ஐகாரமும் வடமொழியில் ஆகாரமாகும். ஆங்கிலப் பவுன் இந்திய ரூபாயாக மாறினால் இந்திய ரூபாய்களும் ஆங்கிலப் பவுனாக மாறுமன்றோ? அது போன்றே.

| உ-ம். | தமிழ் | வடமொழி |
|---|---|---|
| (சாய்-பகுதி) | சாயை | சாயா छाया |
| (மால்-பகுதி) | மாலை | மாலா माला |

பலர் 'ஆவீறையும்' என்பதன் மறுதலையை யுணராது ஐகாரவீற்றுத் தமிழ்ச்சொற்களையெல்லாம் 'சூர்ரம்' வாய் பாட்டில் ஆகாரவீற்று வடசொற்றிரிபாகக் கொள்ளுவர்.

தென்சொற்களை வடசொற்களாக்கும் முறைகள் பலவுள. அவற்றுள் ப்ரதிமா என்னுஞ் சொல்லிற் கொண்டன மூன்று.

அவையாவன:—

1 ப—ப்ர
2 டி—தி (ட—த)
3 மை—மா

மொழிமுதன் மெய்யொடு ரகரம் சேர்த்தவளவானே தூய தென்சொற்களையும் வடசொல்லென மயங்குகின்றனர் தமிழறிஞர். இனி வேறுபல மாறுதல் கூடின் அவர் மயங்கு தலைச் சொல்லவும் வேண்டுமோ?

"பிறக்கு—பிருதக்கென்னும் வடமொழிச் சிதைவென்க" என்றார் அடியார்க்கு நல்லார். (சிலப். பக் 162)

பின்—பின்பு, பின்று, பிறந்து—பிற, பிறகு, பிறக்கு.

இத்துணைத் தெளிவாகப் பிறக்கு என்பதன் மூலமும் பிறவடிவும் தமிழிலிருந்தும் அடியார்க்குநல்லார் அதனை வட

சொல்லெனப் பிறழவுணர்ந்தமைக்கு ஊழ்வினை யல்லது வேறொரு காரணங் கண்டிலம். 'பிறக்கொழிய' என்பதற்குப் 'பின்னிட்டொழிய' என்று அரும்பதவுரைகள் உரைத்ததையும் அவர் உற்று நோக்கிலர்.

இனி, படி என்னும் சொல் ஒலித்தற் பொருளில் படித்தலையும் வாசித்தலையும் குறிக்கும்.

படி—to read, to learn, to sing, to memorise.

Sans. पठ् படி + அம் = பாடம்.

இதுகாறுங் கூறியவற்றால் படிமை என்பது தென்சொல்லேயென்றும், ப்ரதிமா என்பது அதன் திரிபேஎன்றும், இருமொழிக்கும் பொதுச்சொற்களை வடிவுபற்றி மயங்காது பகுதிப் பொருளறிந்து இன்ன மொழியெனத் துணிதல் வேண்டுமென்றும் அறிந்து கடைப்பிடிக்க.

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### மருதம்

தலைவிக்கும் தலைவனுக்கும் களவுக்கூட்டம் உளதாக, அதனையறியாத தலைவியின் சுற்றத்தார் அயலான் ஒருவனுக்குத் தலைவியை மணம் செய்து கொடுப்பதற்குப் பொருந்திய காலத்தில், அதனைத் தடுக்கும்பொருட்டுத் தோழி செவிலிக்கு அறத்தொடுநிற்றல் வேண்டுமெனக்கருதி அவளுக்குத் தலைவி உண்மை யுரைத்தது.

ஆதிமந்தியார் பாடியது

31. மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனை;
யானுமோ ராடுகள மகளே; யென்கை

கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமோ ராடுகள மகனே.

என்பது நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது.

பதவுரை:—

மள்ளர் குழீஇய விழவினானும்—வீரர்கள் கூடிய விழா விடங்களிலும்; மகளிர் தழீஇய துணங்கையானும்—பெண்கள் கூடியாடும் துணங்கையாடும் இடங்களிலும், யாண்டும்—வேறெந்த விடத்திலும், மாண் தக்கோனைக் காணேன்—மாட்சிமை பொருந்திய பெருங்குணமுடையோனை நான் கண்டிலேன்; யானும் ஓர் ஆடுகளமகளே—அத்தகையோனைத் தேடித்திரிதலால் யானும் ஆடுகளத்து மகளை யொப்பாவேன்; என் கை—என்னுடைய கையிலுள்ள, கோள்தீர் இலங்குவளை நெகிழ்த்த—குற்றமற்ற விளங்குகின்ற வளைகளை நெகிழும்படி செய்த, பீடுகெழு குரிசிலும்—பெருமை நிறைந்த தலைமகனும், ஓர் ஆடுகளமகனே—ஓர் ஆடுகளத்து மகனை ஒப்பாவான்.

மள்ளர்—வீரர். விழவு—அவர்கள் படைக்கலத்திற்கு எடுக்கும் விழா. மகளிர் பலர் கூடி இரண்டு கைகளையும் மடக்கி விலாப்புறத் தடித்துக்கொண்டு ஆடும் கூத்துத் துணங்கை எனப்படும். விழவு, துணங்கை—ஆகுபெயர்கள்.

கோடு + ஈர் + வளை = கோடீர்வளை = சங்கினை யறுத்துச் செய்த வளை என்றும் கூறலாம். கோடு = சங்கு. கோள்—குற்றம். கோள் + தீர் = கோடீர். குரிசில்—ஆண்களிற் சிறந்தோன்.

"யாண்டும் காணேன் மாண்டக்கோனை' என்பதனாலும்,

"குரிசிலு மோர் ஆடுகள மகனே" என்பதனாலும்,

"யானுமோர் ஆடுகள மகளே" என்பதனாலும் தம்மிருவருக்கும் உண்டாய கூட்டுறவைத் தோழிக்கு அறிவித்து அவளைச் செவிலிக்கு அறத்தொடு நிற்குமாறு செய்தமை யறிக.

மேற்கோள் விளக்கம்:—

1. "மள்ளர் குழீஇய விழவினானும்"—"அதன்புறம் எனவே அதற்கு அயலாகிய நொதுமலர் வரைவாயிற்று" என்பதற்கு மேற்கோள். —(தொல். களவு. பக். 430)

2. "மள்ளர்........மகனே"—"யாண்டும் காணேனென அவனுள் வழிபட்டுக் கூறினமையிற் கற்பின் பாலதாய்த் தோழியும்

தலைவனும் பெண்டன்மையிற் றிரியக் கருதாது நன்கு மதித்தவாறு காண்க" என்பது மேற்கோள். —(தொல். களவு. பக். 486-7)

3. "மள்ளர் குழீஇய விழவினானும்' 'அருங்கடி யன்னை (நற். 365) 'பாம்பு மதனழியும்' (அகம் 8) 'பானகுவளை' என்பனவற்றுள் தலைவி தேடிச்சென்றதும், செல்வாமென்றதும் சிறைப்புறமாக வரைவுகடாயது. அறப்பயன் றருதலின் அறக்கழிவுடையவேனு மமைந்தன. இது, 'பல்வேறு கவர்பொருணாட்டத்தான்' (தொல். கள. 23) அறக்கழிவுடையனவும் கூறப்பெறுமென் றமைப்பது பெரும்பான்மை. இஃது அதிகாரத்தால் தோழிக்குந் தலைவிக்குங் கொள்க". —(தொல். பொருள். பக். 813)

4. " கன்று முண்ணாது கலத்தினும் படாது—நல்லான் றீப்பாலிலத்துக்......கவினே' (குறுந். 27). இது வெள்ளிவீதியார் பாட்டு. 'மள்ளர் குழீஇய விழவினானும்......மகனே' இது கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த—ஆதிமந்திபோல (அகம். 236) காதலற்கு எடுத்த ஆதிமந்தி பாட்டு. இவை தத்தம் பெயராற் கூறிற் புறமாமென் றஞ்சி வாளாது கூறினார்." —(தொல். அகத். பக். 146)

5. "மகளிர் தழீஇய துணங்கை யானும்" துணங்கை—என்பது ஈண்டு மகளிர் ஆடும் ஓர்வகைக் கூத்து; இதனைச் சிங்கிக்கூத்து என்றும் கூறுவர்; இதனை மகிழ்ச்சியுண்டான காலத்தில் சுற்றத்தாரோடு ஆடுவார்கள். இதற்கு முழவு முதலிய வாச்சியமும் பாட்டும் உண்டு.

(1) "தமர்பாடும் துணங்கையு ளரவம்" —(கலி. 70-14)

(2) "துணங்கையந் தழூஉவின் மணங்கமழ்சேரி"

(3) "இலங்குவளை மடமங்கையர், துணங்கையஞ்சீர்"
—(மதுரை. 329, 359, 360)

(4) "கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்"

(5) "முழாஅவிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாக"
—(பதிற். 13: 5; 52: 14)

(6) "முழவமிழ் துணங்கை தூங்கும்" —(அகம். 336-16)

(7) "நிரைதொடி நல்லவர் துணங்கையுள் தலைக்கொள்ள"
—(கலி. 73-16)

(8) தளரிய லவரொடு துணஙகையாய்" —(கலி. 66-17.)

"பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத்
துடக்கிய நடையது துணங்கை யாகும்"—என்பது இதன் இலக்கணம். வீரர் வெற்றிகொண்டு ஆடும் துணங்கையும், பேய்கள் ஆடும் துணங்கையும் இதனின் வேறு.

6. "கோடீரிலங்குவளை நெகிழ" —(குறுந். 11)

(a) 'யானுமோர்'—'யானுமொர்'—பிரதிபேதம்
(b) 'குரிசிலுமோர்'—'குரிசிலுமோர்'—பிரதிபேதம்

தலைவனைத் தலைவி தேடிச்சென்றதாகக் கூறுவது உலக வழக்கன்று எனினும் பொருட்பயம் படவருதலின் உலக வழக்கென்றே கொள்க. என்னை? "அறக்கழிவுடையன பொருட்பயம் படவரின், வழக்கென வழங்கலும் பழித்தன்றென்ப"—(தொல்-பொருளியல் 24) என்பாராகலின்.

வீரர் விழவினும் மகளிர் விழவினும் பலரும் கூடுவர்—இதனை,
"வில்லார் விழவினும் வேலாழி சூழுலகி
னல்லார் விழவகத்து நாங்காணே—நல்லா
யுவர்க்கத் தொரோவுதவிச் சேர்ப்ப னெப்பாரைச்
சுவர்க்கத் துளராயிற் சூழ்"
—(திணைமாலை 150, நெய்தல் 31)

என்பதால் அறிக.

மெய்ப்பாடு—இறைபற்றிய அச்சம்.
பயன்—அறத்தொடு நிற்கத் தோழிக்குணர்த்தல்.

## குறிஞ்சி

தலைவியின் கூட்டத்தைத் தோழியால் பெறவிரும்பிய தலைவன், அவளை இரந்து பின்னின்று, அவள் தன் குறையை மறுக்காமலிருக்கும்பொருட்டுத் தன்னை மடலூருமாறு செய்தல் அவட்குப் பழியாம் என்பது தோன்றச் சொல்லியது.

### அள்ளூர் நன்முல்லையார் பாடியது

32\. காலையும் பகலும் கையறு மாலையும்
ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்
பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்;
மாவென மடலொடு மறுகிற் றோன்றித்
தேற்றெனத் தூற்றலும் பழியே;
வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே.

என்பது பின்னின்றான் கூறியது.

பதவுரை:—

காலையும், பகலும், கையறு மாலையும்—காலைப்பொழுதும், பகற்பொழுதும், செயலற்றுச் சோர்வினை யடையும் மாலைப்பொழுதும், ஊர்துஞ்சு யாமமும்—ஊரிலுள்ளோர் ஆழ்ந்து நித்திரை செய்யும் நள்ளிரவும், விடியலும்—வைகறை எனும் விடியற்காலமும், என்று—என்று சொல்லப்பட்ட, இப்பொழுது இடைதெரியில்—இப் பொழுதுகளும் அவை

களின் வித்தியாசமும், அக்காலங்களில் செய்யப்படவேண்டிய கருமங்களும் உணரக்கூடுமேயானால், காமம் பொய்யே—அந் நிலையையுடைய ஒருவன் கொண்டிருக்கும் காமம் பொய்க் காமமே; (உண்மையான காமம் ஆகாது); என மடலொடு மறு கில் தோன்றி—குதிரை என்று பனைமடல் மீதேறிக்கொண்டு தெருவில் தோன்றி, தெற்றென—உண்மைக் காமத்தைத் தெளியக்காட்டு என்று, தூற்றலும்—என்னைப் பழித்தலும், பழியே—உமக்குப் பழியே; (என் எனில் என் காமம் மெய்க் காமம் ஆதலின் பொழுதுகளும் அவற்றின் வித்தியாசங்களை யும் நானறியேன்) பிரிவு தலைவரின்—தலைவிக்கும் எனக்கும் பிரிவு தலைப்பட்டு வந்தால், வாழ்தலும் பழியே—அவ்வாறு தலைவியைப் பிரிந்து நான் வாழ்தலும் பெரும்பழியேயாகும். (ஆதலின் நீ தலைவியை என்பால் கூட்டுவிப்பாயாக.)

மக்கள் பகற்பொழுதெல்லாம் வேலைசெய்து களைத்திருக்கும், நேரமும், அக்களைப்பு நீங்க ஒய்வுகொள்ளும் நேரமும் மாலையாதலின் 'கையறுமாலை' என்றார்.

ஊர் துஞ்சியாமம்—'நள்ளென் றன்றே யாமம் — சொல்லவிந்து இனி தடங்கினரே மாக்கள் முனிவின்று,—நனந்தலை யுலகமும் துஞ்சும்'' (குறுந். 6) என்று கூறியிருத்தல் காண்க.

இடை—இடையிற்பட்ட பொழுது; அதன்கண் நிகழும்செயல்—ஆகுபெயர். பொய்யே காமம்—ஏகாரம் தேற்றப்பொருளது. உண்மையாகக் காமநோயால் வருந்துவார் காலை, பகல், மாலை, நள்ளிரவு, விடியல் என்னும் பொழுதுகளையும் அவற்றினிடை நிகழ்வுறத் தக்க கருமங்களையுமுணரார் என்க; எக்காலத்தும் அந்நோயான் மிக வருந்துவாராதலின் பொழுது வேற்றுமைகளையும் உணரவல்லார் அல்லர் என்க. தேற்று-தெளிவி.

யாமம்

யாமம்-இடை இரவு.
''யாமத்துந் துயிலலளலமரு மென்றோழி'' —(கலி. 45-18)
"யாம நடுநாட் டுயில்கொண் டளித்த, காமநோயின்"
—(கலி. 122-21-2)
''பலர்த்துயிற்றும் யாமநீ துஞ்சலைமன்'' —(கலி. 146-36-7)
''தீயவனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம்—நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடன்'' —(நள வெண்: கலி. 94.)
''நள்ளென் றன்றே யாமம்'' —(குறுந். 6)

1. 'தேற்றென'—'தோற்றென'—பிரதிபேதம்.
மெய்ப்பாடு—வருத்தம் பற்றிய இளிவரல்.
பயன்—ஆற்றாமை அறிவித்தல்.

# தமிழ் மொழியில் சகர முதன்மொழி

[துடிசைகிழார் அ. சிதம்பரனாரவர்கள்]

(எ௰-ம் பக்கத் தொடர்ச்சி)

சகர முதற்சொற்கள் அவர்காலத்தில் வழங்கியிராவிட்டால் "சகரக் கிளவியும்" என்று சூத்திரம் செய்யமாட்டார்.

இவ்வழக்குக்கு விரோதமாக உரையாசிரியர்களோ, பதிப்பாசிரியர்களோ உதாரணங் காட்டுவது பொருந்தாது.

"அங்கிக்குத் தகுந்த மாதிரி அங்கத்தை வெட்டுவது அழகாகாது".

ஏட்டிலிருந்து புத்தகங்களில் எழுதும்போது எழுதுகிறவன் ஏட்டுவழக்கங்களை நன்ருய் உணர்ந்தவனுய் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் பல வழுக்கள் உண்டாவது சகசம்.

"அவை" என்ற கடைசி அடியின் முதற்சொல்லை, "அ—ஐ" என்றும், அதற்குத்தக "ஒன்றலங் கடையே" என்பதை "மூன்றலங்கடையே" என்றும் ஏடு எழுதுகிறவன் மாற்றி எழுதிவிட்டபடியால் இவ்வளவு தப்பான எண்ணங்கள் பண்டிதர்கள் மனதில் உதித்தன.

"அ—ஐ—ஔ வெனும் மூன்றலங்கடையே" என்ற கடைசி அடி, க்—த்—ந்—ப்—ம்—ச் என்ற ஆறு மெய்யெழுத்துக்களுக்கும் சேர்ந்ததாயிருக்க, உரையாசிரியர்களும் ஏனைய பண்டிதர்களும், ச் என்ற மெய்யெழுத்துக்கு மாத்திரம் சேர்த்துப் பொருளுரைத்தது வியப்பினும் வியப்பே.

ஔ என்ற ஓர் உயிர் எழுத்தோடுமாத்திரம் க்—த்—ந்—ப்—ம் எழுத்துகள் மொழிக்கு முதலில் வராது என்று ஒத்துக்கொண்டவர்கள் அ—ஐ இரண்டு எழுத்துக்களையும் விட்டுவிடக் காரணம் என்ன ?

"கௌ"—"மௌ" என்ற எழுத்துக்களை இப்போது சில பதிப்பாளர்கள் மொழிக்கு முதலாகக்கொண்டு பதிப்பிக்கிறார்களே யெனில், அவர்களும் "தௌ—பௌ—நௌ" எழுத்துக்களை மொழிக்கு முதலாகக் கொள்வதில்லை. ஆகையால் அவர்கள் கௌ—மௌ என்ற எழுத்துக்களை முதலில் அமைத்ததும் போலிக் கொள்கையாம் என விடுக்க.

ஆகையால் அ-ஐ-ஔ என்னும் மூன்று எழுத்துக்களும் சூத்திரத்தில் கூறிய ஆறு மெய்யெழுத்துக்களுமே சேரும்.

அப்படிச் சேர்த்துப் பொருளுரைப்பாரேல், அவர்களுக்கே அவ்வடியின் பொய்மை வெளிப்பட்டிருக்கும். அப்

படி அவர்களுக்கு அது தோற்றமற் போனது தமிழ்மொழி செய்த பாவமே.

இனி ஐயங்கார் அவர்கள் கூறிய முதல் முடிவை எடுத்துக் கொள்வோம் :—

(1) "தொல்காப்பியர் காலத்தே சகர முதற் சொற்கள் தமிழில் வழங்கவில்லை" என்பது. அப்படித் தமிழ் இலக்கியங்களில் அவர் காலத்தில் வழங்கி இராவிட்டால், அவர் "சகரக் கிளவியும்" என்று சூத்திரம் செய்திருக்கமாட்டார். ஆகையால், தொல்காப்பியர்காலத்தே தமிழில் சகர முதற்சொற்கள் உண்டு என்பது போதருகின்றது. ஆகையால், ஐயங்கார் அவர்களுடைய முதற் கோள்கை வலியுடைத்தன்று.

(2) இரண்டாவது, "சங்க இலக்கியங்களில் காணப்படும் சகர முதற்சொற்கள் எல்லாம் வடமொழிச் சிதைவுகளாம்" என்றார்.

அப்படி வடமொழிச் சிதைவுகளாயிருந்தால், நச்சினார்க்கினியரும், இளம்பூரணரும் "சட்டி—சள்ளை—சமை—சமழ்ப்பு"—என்பன தமிழ்ச் சொற்களே என்று கூறுர்கள்.

சமழ்ப்பு என்ற பதத்திலுள்ள ழகரம் வேறு மொழி எழுத்தாக இருக்கமுடியாதென்பதும், அது தமிழ்ச்சொல்லே என்பதும் யாவரும் ஒப்புக்கொண்ட முடிபுகள். ஆகையால், இரண்டாவது முடிவும் வலியுடைத்தன்று

(3) மூன்றுவது, "பிற்கால இலக்கியங்களில் சிதைக்காமல் பிறமொழிகளில் உள்ளபடியே சகர முதற்சொற்கள் உபயோகிக்கப் படலாயின" என்கிறுர்.

பிற்கால இலக்கணமாகிய நன்னூலில் வடசொல், திசைச் சொற்களைத் தமிழில் எப்படிவழங்குவது என்பதற்கு பவணந்தி முனிவர் சூத்திரம் செய்திருக்கிறுர். அப்படி இருக்கத் தமிழர் பிறமொழிச் சொற்களை அப்படியே வைத்து வழங்கினுர்கள் என்று ஐயங்கார் அவர்கள் கூறுவது பொருத்தமற்றது. அந்த வழக்கம் என்றும் தமிழர்களிடம் இல்லை. அப்படி இல்லை என்பதே இக்காலத்தில் தமிழர்கள் மேல் ஏற்றும் குற்றம் என்று யாவரும் அறிவர்.

ஆகையால், சொற்கள் சிதையாமல் உபயோகப்பட்டிருக்கின்றன என்றுல், அவை எல்லாம் தூய தமிழ்ச் சொற்களே என்று கூறத் தடை இல்லை. ஆகையால் மூன்றுவது கோள்கையும் வலியற்றதே,

நான்காவது, பிறமொழிக்குரிய ரகர லகர முதற் சொற்கள் தமிழில் வந்து வழங்கும்போது அ—இ—உ என்ற எழுத்துக்களில் ஏதாயினும் ஒன்றை முதலில் உபயோகிக்கிறோம். இது தமிழ் வழக்கு. அப்படிக் கில்லாமல் சங்கப் புலவர்கள் சகரமுதற் சொற்களைச் சுட்டு எழுத்துக்கள் இல்லாமலே உபயோகப்படுத்தியிருப்பதால், அவை தூய தமிழ்ச் சொற்களே என்று கொள்ள வேண்டியிருக்க, அதனை விடுத்துத் தொல்காப்பியர் காலத்துக்கு முற்பட்ட சங்கப் புலவர்களையும் தொல்காப்பியருக்குக் காலத்தாற் பிற்பட்டவர்கள் என்று இவ்வொரு நியாயங்கொண்டே ஐயங்கார் அவர்கள் கூறுவது பொருந்தாது என்பது வெள்ளிடை மலை.

இனி, ஐந்தாவதாக, "தமிழ்மொழியிலுள்ள சகர முதற் சொற்கள் எல்லாம் வடசொல்லாகவோ திசைச்சொல்லாகவோ இருத்தல்வேண்டும்" என அவர் கூறுகிறார். அப்படி அவர் கூறுவதற்கு இப்பொழுது அச்சுப் புத்தகங்களில் இருக்கும் 29-வது சூத்திரத்தில் மாற்றப்பட்ட கடைசி அடியேதான் காரணம். அந்த அடியே தவறுடைத்து என்று மேலே காட்டியதால் அவ்வடியை ஆதாரமாகக்கொண்ட அவருடைய கொள்கையும் ஆதாரமற்றது என்பது கூறாமலே அமையும்.

இனி ஆறாவதாக, "சகர முதற்சொற்களில் ஒன்றும் தனித் தமிழ்ச்சொற்களாக (தூய தமிழ்ச்சொல்லாக) இருத்தல் இயலாது" என்று ஐயங்கார் அவர்கள் கூறுவது பிடிவாதமாக (dogmatic) இருக்கிறதே யொழிய காரணம் ஒன்றும் இல்லை.

சகர ஒலியைப்பற்றி மேனாட்டு ஆராய்ச்சியாளர் கூறுவதையேனும் அவர் உற்று நோக்கினார் இல்லை. அது வருமாறு:—

(1) The cerebral "s" which begins the word 'Siva' is a Tamil Sound which crept into the Aryan alphabet as a result of Dravidian contact.

(Ragozin's Vedic India.)

(2) Professor Rapson says, "The cerebrals are foreign to Indo-European languages while they are characteristic of Dravidian tongues".

(3) Dr. Grierson says, "I am of opinion that the cerebral sound 's' belongs to Tamil language."

அதாவது 'ச' என்ற ஒலியே தமிழ் மொழிக்குரியது. தமிழ்ப் பாஷையிலிருந்துதான் மற்றப்பாஷைகள் அவ்வொலியைக் கடன்வாங்கின என்று கூறுகின்றனர்.

ஆகையால், ஒலி இலக்கணத்தை நன்ருய் உணர்ந்த தொல்காப்பியர், க்—ச்—த்—ங்—ப்—ம் என்ற ஆறு மெய்யெழுத்துக்களும் மொழிக்கு முதலில் வரா என்று சூத்திரம் செய்யமாட்டார்.

ஆகையால், அவரது 6-வது கொள்கையும் இற்றுப் போயிற்று.

இனி அடுத்தபடியாக ஐயங்கார் அவர்கள், "இதுவுமன்றி, மொழிக்கு முதலாகாது என்று தொல்காப்பியர் விதந்து கூறிய சூத்திர விதிக்கு மாருகத் திருவள்ளுவர் சகர முதற் சொற்களைப் பிற மொழிகளில் உள்ளபடியே உருத்திரிக்காமல் தாம் கூறும் குறள் வெண்பாக்களிலே முதற்சொல்லாக அமைத்திருக்கிருர். ஏனைய கடைச்சங்கப்புலவர்களாயினும், அச்சொற்களைத் தமிழ் ஒலி இலக்கணத்திற்கு ஏற்பக் கூடியவரை திரித்துச் செய்யுளின் இடையே பெய்திருக்கின்றனர். இதனாலும் திருவள்ளுவர் தொல்காப்பியருக்கும் கடைச்சங்கப் புலவர்கட்கும் காலத்தாற் பிற்பட்டவர் எனக் கருத இடம் தருகின்றது" என்று பகுதி 7-ல் கூறிக்கொண்டே போகிருர்.

இங்கே ஐயங்கார் அவர்கள் திருவள்ளுவரைக் கடைச்சங்கப்புலவர்கட்கும் காலத்தாற் பிற்பட்டவரென்று சரித்திர விரோதமாகக் கருதினதுமல்லாமல் திருவள்ளுவர் ஒலி யிலக்கணம் அறியாது, தொல்காப்பியச் சூத்திரத்துக்கு மாருகவும் நூல் செய்துள்ளார் என்ற குற்றத்தையும் அவர்மேல் சுமத்தியுள்ளார்.

திருவள்ளுவர் தொல்காப்பியத்தைப் பாராதவர் அல்லர். ஒலி யிலக்கணம் அறியாதவர் அல்லர். நூலாசிரியர்களில் அவருக்கு இணையான புலவர் எத்தேயத்திலும் இல்லை. ஆனால் அடிமாற்றப்பட்ட, உருமாற்றப்பட்ட தொல்காப்பியச் சூத்திரங்களை நம் திருவள்ளுவர் படிக்கவில்லை. உண்மையான வடிவத்தில் தொல்காப்பியச் சூத்திரங்களைத் திருவள்ளுவர் படித்துப் பிறகு நூல்செய்தாரே யொழிய வேறின்று.

ஆகையால், அத்தகைய இணையற்ற புலவர் சகர முதற் சொற்களைத் தம் குறட்பாக்களில் முதலில் பெய்து பாடி இருப்பாரானல், அச்சொற்கள் எல்லாம் தூய தமிழ்ச்சொற்களே

ஆகும். என்பதில் தடையொன்றில்லை. அதனைவிட்டுத் திருவள்ளுவர்மீது குற்றம் சாட்டுவது அறியாமையாம்.

திருவள்ளுவர் நூலில் பிறபாஷைச்சொற்கள் ஒரு சொல்லேனும் கிடையாது. அது கொண்டன்றே வைணவ ஆச்சாரியர்கள் எல்லாம் திருவள்ளுவரைக் குறிக்குமிடத்துத் "தமிழர்" என்றே கூறிப்போந்தார். இதனையேனும் ஐயங்கார் அவர்கள் உற்றுநோக்குவாராக.

ஆகையால், இதுகாறும் கூறியவாற்றால் "க—த—ந—ப—ம எனுமாம் ஐந்தெழுத்தும் எல்லா உயிரோடும் செல்லுமார் முதலே சகரக் கிளவியும் அவற்றோரற்றே அவை ஒளவெனும் ஒன்றலங்கடையே"

என்பதுதான் சரியான தொல்காப்பியச்சூத்திரம் என்றும்,

"அ—ஐ—ஒள எனும் மூன்றலங்கடையே" என்ற அச்சுப்புத்தகத்திலுள்ள சூத்திரத்தின் கடைசி அடி தவறுதலாய் ஏற்பட்ட அடி என்றும்,

கவ்வு—தவ்வல்—நவ்வி—பவ்வியம்—மவ்வல்—சவ்வரிசி என்றே எழுதுவது முறைமை யென்றும்,

கௌ-தௌ-நௌ-பௌ-மௌ-சௌ-என்ற எழுத்துக்கள் மொழிக்கு முதலாக வாரா என்றும்,

உரையாசிரியர்களும் அடிமாற்றத்தைக் கவனியாது உரையெழுதிச் சென்றார்கள் என்றும், அதற்குத்தக உதாரணச் சொற்களையும் வழக்குக்கு விரோதமாகக் கூறிப்போந்தனர் என்றும்; அன்றேல், உரையாசிரியர்கள் சரிவரக் கூறியிருக்கப் பதிப்பாசிரியர்கள் தான் அம்மாதிரி செய்தார்களோ என்பது ஆராயத்தக்கதென்றும்,

மெய்யெழுத்துக்கள் அ ஒழிந்தால் மற்ற உயிர்களோடு மொழிக்கு முதலில் வாரா என்பது சாத்திரக் கொள்கையென்றும்,

ச என்ற ஒலியே தமிழ் ஒலிதான் என்று மேனாட்டு ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள் என்றும், அதனானே, பிறமொழிகளில் உள்ள சகரமுதற்சொற்கள் எல்லாம் தமிழில் இருந்துதான் போயின என்றும், தமிழ் இலக்கியங்களில் உள்ள சகர முதற்சொற்கள் எல்லாம் தூய தமிழ்ச்சொற்களே என்றும் நிறுவினம்.

---

# "வெண்பாவிற் புகழேந்தி"

[பண்டிதர். திரு. கா. பொ. இரத்தினம் அவர்கள்]

(முன் எஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

நள வெண்பாவிலுள்ள வெண்பாக்களெல்லாம் ஒன்றி னொன்று மிக்க சுவையுடையனவாய் "வெல்லப் பிள்ளை யாருக்கு இந்தப்பாகந்தான் இனிப்பு" என்று சொல்ல முடியாததுபோல் அமைந்திருக்கின்றன. புலவர் காதனேய்ப் பட்டார்க்குரிய குணங்களையும் அவற்றின் செயல்களையும் உலக வியற்கைக்கு மாறின்றி முறைப்பட நன்கு உரைத்திருக் கின்றார். நள மகாராஜன் அன்னத்தை யனுப்பிவிட்டு, "இவ் வளவிற் செல்லுங்கொல், இவ்வளவிற் காணுங்கொல், இவ் வளவில் இயம்புங்கொல், இவ்வளவில் மீளுங்கொல்" என்றெல் லாம் படிப்படியா யெண்ணுகிறானும். அன்னம் தமயந்தி யிடம் சென்றபின் அவன் நிலைமையைக் கூறுமாசிரியர்,

"வழிமேல் விழிவைத்து வாணுதலாள் நாமமொழிமேற் செவிவைத்து
மோகச்சுழி மேற்றன்னஞ் சோடவைத்து அயர்ந்தான்"

என்றும் கூறினர். விழியும், செவியும் மாத்திரம் அயரா திருந்தன வாகையாற்றான் அன்னத்தை எதிர்பார்த்திருந்த வழியில் மயில் தோகையை விரித்தாடுதலையும், தமயந்தியின் இடைக்குப் பேருவமையாகப் பொருந்திய கொடிகள் இருத் தலையுங் கண்டு வருந்துவதற்கும் சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறு குரலைக்கேட்டு ஆவியுருகி அழிதற்கும் ஆளானன். இனித் தமயந்தியின் நிலையை "உள்ளம்போய், நாண்போய், உரைபோய், கண்ணீர்போய் ஆவிபோனலும் ஆசைபோகாது வருந்திக்கிடந்தா"ளென்றனர். நளனது நெஞ்சு தமயந்தியிடம் போனதாகவும் அதனைக் காண்பான் வந்த நளன்பின் தமயந்தி யின் நெஞ்சு சென்றதாகவும் இருவர்க்கும் ஒரு நெஞ்சே உளதெனப் பொருள்படக் கூறியிருக்கின்றனர்.

இன்னும் தமயந்தியின் கோலத்தைக் கண்ட வணிகன் அவளது தோற்றத்தால் அவளை எக்குலத்தாளென முதலும் யார் யடந்தை, யாதுன்னூர் எனவும் முறையாக வினவின னகக் கூறப்பட்டிருத்தலும் கற்போர் உள்ளத்தைக் கவருந் தகையது.

நமது புலவர் கொடியவர்களையும் தீங்கு செய்பவர்களை யும் அழைக்கும் பொழுதெல்லாம் அவர்களின் கொடுமையை விளக்கும் அடைகளைக் கொடுத்தே அழைக்கின்றனர். 'கன்

னிறத்த சிந்தைக்கலி' 'தீதுதருகலி' 'வஞ்சகக்கலி' 'தீங்கு தருகலி' 'புன்னெறியிலார்க்குங் கலி' என்றிவ்வாறெல்லாம் கலியையும், 'வெங்கோலரசன்' 'வன்னெஞ்சன்' 'கொடியான்' 'அரசறியா வேந்தன்' முதலியவற்றால் புட்கரனையும் அழைத்திருக்கின்றார்.

நளவெண்பாவில் 'பாரதப்போர் செற்றானும்' 'ஆழி வடிம் பலம்ப நின்றானும்' 'சூழிசை நாற் சங்கத்திருந்தானும்' 'நற்றேவர் தூது நடந்தானும்' 'மேருமலையைச் செண்டால் திரித்தானும்' 'காமனைப் பொடியாடி கொன்றதெல்லாம் பொய்' எனச் சில சரிதச் செய்திகள் கூறப்பட்டிருக்கின்றன.

புகழேந்தியார் தம் நூலிலே இடையிடையே சில உண்மைகளைப் பொதிந்திருக்கின்றனர். நாராயணாயநம வென்று அவனடியிற் சாராரை வினைசாரு மென்றதையும், செம்மை நினையாமை பூண்டார்நெறி இவைகள் என்றதையும், சூதின் தீமையையும், பிள்ளைகளின் அருமையையும், கடு வினையை எவர் கடப்பார் என்பதையும் மகப்பெறு மானிடர்கள் வானவர் தம்மூர்க்குப் புகப்பெறுரென்பதையும், பிறரை ஈயெனக்கேட்டல் தானந்துடைத்து தருமத்தை வேர்பறித்து மானந்துடைப்பதோர் வாளென்பதையும் பிறவற்றையும் கூறியிருத்தல் காண்க.

இனி இவரது வெண்பாக்களில் சில சொற்களும் சொற்றொடர்களும் பல விடங்களில் திரும்பத் திரும்ப வந்துள்ளன. அவற்றுள் சில வருமாறு:—

'காந்தாரம் பாடிக்களி வண்டரற்றும்'......
'கார்வண்டு காந்தாரம் விட்டுரைக்கும் தார்வணிகர் வேந்து'
'தன்னுடு பின்னுகக் கடற்றானை முன்னுக'
'பொன்வாயில் பின்னுகப் போயினன் முன்னுனில்'
'விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்ல'
'காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்டு'
'கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டு'
'காரிருளிற் பாழ்மண்டபத்தே தன் காதலியை'

நிற்க. புலவரது வெண்பாக்களெல்லாம் சொல்லணி பொருளணி நிறைந்து மிளிர்கின்றன.

'கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்'
'காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்டு'
'கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டு'
'அழுவார் விழுவார் அயிர்ப்பார் உயிர்ப்பார்'
'கருங்குழலார் செங்கையினல் வெங்கவரிப் பைங்கான்'
'முன்னுகப் பின்னுக'

இவ்வடிகளிலுள்ள தொடை நயங்களை எடுத்துக்காட்டாகக் கொள்க. பெரும்பாலும் உவமையணி உருவக அணிகளோடு பரியாயம், திரிபதிசயம் முதலிய அணிகளும் இவர் வெண்பாக்களை அணி செய்கின்றன.

"கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும் போய்
நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றென்"

இது பரியாயவணி.

"பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை யையுற்று மந்தி
தெளியா திருக்குந் திருநாடா வுன்னை
ஒளியாது காட்டுன் னுரு"

இது திரிபதிசயவணி.

நளன் மடைப்பள்ளியிற் சென்று சமைக்கப் புகுதலும் அஃது உடனே ஒருவராலும் நிரப்பாமல் நிரம்பியதை 'ஆதி மறைநூல் அனைத்துந் தெரிந்து உணர்ந்த நீதி நெறியாளர் நெஞ்சம்போல் நிரம்பிய' தென்கிறார். நளனைவிட்டுக் கலி நீங்கியதைச் சந்திரன்சுவர்க்கி கொண்டாடும் பாவலன்பால் நின்ற பசிநீங்கியதற்கு உவமித்தார். நளனது தேர்ப்பாகன் வடிவு, மிக்கோன் உலகளந்த மெய்யடியே சார்பாகப் புக்கோர் அருவினைபோல் நீங்கிற்று என்றார். நளனைவிட்டுப் புட்கரனை இலக்குமி அடைந்தது தமது கற்புமிக்க மனைவியரை விட்டுவிட்டுத் தாசிகளிடத்துச் செல்வதைப் போலிருந்தது புலவருக்கு. 'இரா உள்ளம் புதைய வைத்த பொதுமகளிர் தங்கள் இதயம் போன்றது' எனவும், 'மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப் புன்காகம் கொள்ளத் தான்போனாற்போல்' நளன் புட்கரனுக்குப் பார்கொடுத்துப் போனான் எனவும், 'அடம்பின் கவட்டிலைகள் மானின் குளம்பு ஒத்தன' எனவும் தமயந்தியை விட்டுப்பிரிந்த நளன் மனம் 'தோயல் கடைவார் கைபோலப்போ யொருகால் மீளும் புகுந்து ஒருகால் மீண்டேகும்' எனவும் கூறியிருக்கின்றார்.

புலவரது வெண்பாக்களுக்கும் மற்றையோர் செய்யுள்களுக்கு மிடையில் அதிக ஒற்றுமை இருக்கின்றது. 'பாவையர் கைதீண்டப் பணியாதார் யாரே!' என்று புகழேந்தியார் கூற, 'வஞ்சிபோன் மருங்குலார்மாட்டு யாவரே வணங்கலாதார்' எனக் கம்பர் கூறுகின்றார். கம்பர் சீதையைத் 'தழலிடு

வல்லி போலச் சாம்பினுள்' எனப் புகழேந்தியார் தமயந்தியை 'வேகின்ற தளிர்போலச் சோர்ந்தாள்' எனவும், நளனை 'தழ லிற்படு தளிர்போற் காய்ந்து' எனவும் உரைக்கின்றார். "செழு நீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்வாள் முழுநீல மென் றயிர்த்துக் கழுநீரைக் கொய்யாது போவாள்" எனும் புகழேந் தியார் கூற்றுக்கும் "கைக்கொள் நீரிற் கண்ணிழல் கயலென மெய்க்கண் மேவாள் மெல்லெனச் சொரிய" எனும் கொங்கு வேளிர் கூற்றுக்கும் இடையிலுள்ள பொருள் ஒற்றுமை எத்த கையது!

"செங்கால் மடப்புறவம் பெடைக்குப் பேசுஞ்
சிறுகுரலுக் குடலுருகிச் சிந்தித்தாங்கே"

இது திருமங்கையாழ்வார் கூற்று.

சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட் டாவியுருகி யழிந்திட்டான்.

இஃது புகழேந்தியார் கூற்று.

"கொடிமின் முகிலொடு நிலஞ்சேர்ந் தென்ன
விறுநுசுப் பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்கு"

"வான்முகிலும் மின்னலும் வறுநிலத்து வீழ்ந்தபோற்
றானுங்குழலுந் தனிவீழ்ந் தாள்"

இவற்றுள் முன்னையது சீத்தலைச் சாத்தனார் கூற்று; பின்னையது புகழேந்தியார் கூற்று.

"வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயுங்—கருதுங்காற்
பண்டினை யல்லையாற் பாழித்தோட் கைதையைக்
கண்டனை யோவாழி கடல்"

"போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று"

இவையிரண்டில் முதலாவது சங்கச் செய்யுள், இரண்டா வது நளவெண்பா.

"அப்புடைய லங்குமீன மருமாக்கலி
உப்புடையிந்து வென்றுதித்த வூழித்தீ
வெப்புடை விரிகதிர் விரிப்பமெய் யெலாம்
கொப்புளங் கொண்டதோ கொதிக்கும் வானமே"

"செப்பிளங் கொங்கை மீர்திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங்கொண்ட குளிர்வானை—யிப்பொழுது

மீன் பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து"

இவை முறையே கம்பர் புகழேந்தியார் கூற்றுக்கள்

"விரிந்த பசு நெட்டிலைக் கமுகின்
மேவிக் ககனத் தருவையதன்
மீது படர்பூங் கொடிவழி போய்
மிதித்துக் குனித்து விளையாடி
வரிந்தகலையின் நெடுங்கயிற்று
வழிபோய் நடிக்கும் பொருநர்திறம்"

—சிவஞான சுவாமிகள் கூற்று.

மாநீர் நெடுங்கயத்து வள்ளிக் கொடிமீது
தானேகு மன்னந் தனிக்கயிற்றில்—போநீள்
கழைக் கோதையரேய்க்குங் காந்தாரநாடன்"

—புகழேந்தியார் கூற்று.

"அங்கண் விசும்பினவிர் நிலாப்பாரிக்கும்"

—நாலடியார்.

"அங்கண் விசும்பினவிர் மதி"

—நளவெண்பா.

"அந்தாமரை யன்னமே"

—திருக்கோவை.

"அந்தாமரையி லவளை"

—நளவெண்பா.

சுருங்கக் கூறுமிடத்து நளவெண்பா ஓதற்கெளிதாய் சிந்தைக்குஞ் செவிக்கும் நல்லின்பம் பயப்பதாய் நவில் தொறும் நவில்தொறும் நயம் பெருக்குவதாய் கடுந்தமிழ்ப் பதங்களும் இறுக்கமும், மயக்கமுமின்றி முழு வெண்பாக் களும் செப்பமும் செம்மையும் வாய்ந்து இன்னோசை யுடைத் தாய்ப் பேரறிவினரையே யன்றிச் சிற்றறிவினரையும் சிந்தை மகிழ்விக்கும் செம்பாகமான ஓர் நூலெனக் கூறலாம். செந் தமிழ் பயில்வார் தமிழின் இனிமை காண முதலிற் பயிலும் முதன்மை படைத்த நூலும் இதுவேயாகும்.

---




## சிவஞான போதக் கருத்து

### ஆறுவது சூத்திரம்-முதல் அதிகரணம்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்]



(சிலம்பு 15: பரல் 1: 47-ம் பக்கத்தொடர்ச்சி.)

29. ஆசிரியர் கூறின மேற்கோள் உரையைக் கேட்ட சாங்கியன் கூறுகிறதாவது :— சைவ சித்தாந்தம் போலச் சாங்கிய தத்துவமும் சற்காரிய வாதத்தை ஒப்புக்கொள்கிறது. சற்காரிய வாதத்தின்படி எல்லாப் பொருள்களும் சத்தேயாம்; காணப்படும் உலகமும் சத்தேயாம். காணப்படும் உலகத்தை நீர் அசத்து என்று கூறியது சற்காரிய வாதத்துக்கு முரணாகும். ஆதலால் நீர் கூறியது உண்மைக்குப் பொருந்தாது.

30. சாங்கியர் கூறின தடை உரையைக்கேட்ட ஆசிரியர் நையாயிகனுக்குக் கூறின ஏதுவையே சாங்கியனுக்குப் பொருந்துமாறு வேறொரு பொருள்படக் கூறுகின்றார். அந்த ஏதுவானது முன் 23-வது பந்தியிற் கூறப்பட்டபடி "சுண்டு அறிவினலறியப்பட்ட சுட்டு அசத்து" என்பது. நையாயிகன் *அபாவமும் (இன்மையும்) ஏழு பதார்த்தங்களி லொன்று எனக் கூறும் தார்க்கிகனாதலின், அவன் கூறும் தடைஉரைக்கு மறுப்பாகப் பொருந்துமாறு பிரகாசம் என்ற சொல்லுக்கு உண்டு என்றுணரும் உபலத்தி அறிவு என்றும், அப்பிரகாசம் என்ற சொல்லுக்கு இல்லை என்றுணரும் அநுபலத்தி அறிவு என்றும் தார்க்கிகப்பொருள்பட ஆசிரியர் கூறினார். சைவசித்தாந்தத்தின்படி அபாவம் என்பதொன்றில்லை என்ற உண்மையை அவன் அறியமாட்டானாதலின், ஆசிரியர் அவ்வாறு கூறவேண்டியதாயிற்று (16-வது பந்தி பார்க்க.) சாங்

---

*சிவஞான சுவாமிகள் மொழிபெயர்த்தருளிய தருக்க சங்கிரகம் ௩-வது பக்கம்—ஆறுமுகநாவலர் இரண்டாவது பதிப்பு.

கியன் சற்காரியவாத உண்மையைக் கொள்கிறவனாயினும் அவன் சைவசித்தாந்தம் கூறுகிறபடி சற்காரியவாத உண்மையை அறியமாட்டானாதலின் அவ்வறியாமைபற்றி அவன் கூறுகிற தடைஉரைக்கு மறுப்பாகப் பொருந்துமாறு ஏதுவில் பிரகாசம்* என்ற சொல்லுக்கு விளக்கம் என்றும், அப்பிரகாசம் என்ற சொல்லுக்கு விளக்கமின்மை என்றும் பொருள் கொண்டு ஆசிரியர் அதே ஏதுவைக் கூறுகின்றார். இங்ஙனம் ஓர் ஏதுவை நையாயிகனுக்கும் சாங்கியனுக்கும் அவனவன் கூறுகிற தடை உரைக்குப் பொருந்துமாறு மறுப்பாக இரட்டுறமொழிதல் என்ற உத்தியாற் கூறுதல் ஆசிரியர் கருத்து என்பது, அவர் அவ்வேதுவை விளக்கப் பின்கூறும் எடுத்துக் காட்டு வெண்பாவை இரு தொடர்களாகப் பிரித்து முற்றொடரில் நையாயிகனை "அசத்தறியாய்" என்று விளித்தும் பிற்றொடரில் சாங்கியனை 'அசத்தலாய்' என்று விளித்தும்; முற்றொடரில் 'ஆயின்' என்று சொன்ன கருத்தையே பிற்றொடரில் 'ஓரின்' என்று மொழிந்தும் கூறியதனால் நன்கு புலனாகும். அசத்து என்ற சொல்லுக்குத் தருக்க நூல் கூறுகிற அபாவம் என்ற பொருள்கொண்டு பிணங்குகிற நையாயிகனை 'அசத்தறியாய்' என்றும், சற்காரியவாத உண்மையை நன்கு அறியாது பிணங்குகிற சாங்கியனை சற்காரியவாதி என்றாவது அசற்காரியவாதி என்றாவது கூறாது 'அசத்தலாய்' (அசற்காரியவாதி அல்லாதவனே) என்றும் ஆசிரியர் கூறுதல் பொருந்துமாறு காண்க.

31. சாங்கியன் கூறிய தடை உரைக்கு மறுப்பாகப் பொருந்துமாறு ஏதுவின் பொருள் வருமாறு:—சாங்கியனே, நீ சற்காரியவாத உண்மையை நன்கு அறியாது மயங்கி உனது தடைஉரையைக் கூறுகின்றாய். நீ நினைத்தல் போலக் காணப்படுமுலகம் இல்லை என்று கொண்டு நான் அதனை அசத்து என்று கூறவில்லை. சற்காரியவாத உண்மைப்படி உள்ளது என்றும் இல்லது ஆகாது; இல்லதிலிருந்து என்றும் ஒன்று

---

* நான்காவது சூத்திரம் முதலாவது அதிகரணத்தில் ஆசிரியர் கூறும் "அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்" என்னும் ஏதுவில், 'பிரகாசம்' 'அப்பிரகாசம்' என்னுஞ் சொற்களுக்கு முறையே சித்து என்றும் அசித்து என்றும் சிவஞான சுவாமிகள் கூறியிருத்தலை நோக்குக. தத்துவங்கள் ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்க்கப்படுமிடத்து மேலுள்ள சூக்கும தத்துவம் அதற்கு அடுத்துக் கீழுள்ள தூல தத்துவத்தைத் தன் ஒளியால் விளக்குதலால் முன்னையது சித்து என்றும் பின்னையது அசித்து என்றும் கூறப்படுகின்றன.

உண்டாகாது. காணப்படும் இந்தத் தூலஉலகம் காரியநிலை (காரியாவத்தை) யிலுள்ளது; காரியநிலையிலுள்ள இந்தத் தூல உலகம் அதன் காரண நிலையில் மாயையிலொடுங்கி நிற்பதா யுள்ளது. காரண நிலையிலுள்ள மாயை ஒன்றாயும், பாகங் களில்லாத முழுமையாயும், எங்கும் நிறைந்திருப்பதாயும், அளவை அறிவாலறியப்படாததாயும், உருவமில்லாததாயும், என்றுமொருதன்மைத்தாய் அழிவில்லாததாயும், மலம் விரவியதாயும், இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாயுமுள்ளது. சத்தி உடைமை காரணத்தன்மை; வியத்தி உடைமை காரியத் தன்மையாகும். வியத்தி உடைமை என்பது புலனுமாறு வெளிப்பட்ட தன்மை. இந்த மாயையே இறைவனுடைய அருட்சத்தியால் பலவகைச் சூக்கும தத்துவ உலகங்களும், காணப்படுந் தூல தத்துவ உலகமும் அருவமாயும் அருஉருவமாயும் உருவமாயுமுண்டாதற்கு முதற் காரணமாயுள்ளது. இந்த மாயை முழு ஒளி விளக்கமுடைய தூவெளியிலடங்கி அதனிடம் மலம் விரவாதிருக்குங்கால் முழுப்பிரகாசம் உடையது. இந்த ஒளிதான் பலவகைச் சூக்கும தத்துவங்களிலும் அவற்றின் சூக்கும நிலைக்குத் தக்கவாறு விளங்குகின்றது. தூல தத்துவத்திலும் தூலஉலகிலும் அவ்வொளி இல்லை எனும்படி மிகக் குறைந்து விளங்குகின்றது. இங்ஙனம் மாயையும், காணப்படும் தூலஉலகம்வரை மாயையிலிருந்து உண்டான பலவகை உலகங்களும் அமைந்திருத்தலால், மாயை ஒன்றே முழுப்பிரகாச அருளொளியை உடையதாயும் அதிலிருந்து உண்டாகிய பலவகை உலகங்களும் சூக்கும தூலங்களுக்குத் தக்கவாறு மலம் விரவியிருத்தல்பற்றி ஒளி குறைந்தனவாயுமுள்ளன. முழுஒளிப் பிரகாசமுடைய மாயையே என்றும் மாறாது நிலைத்திருக்கும் தன்மையுடையதாயிருத்தலால், சத்து (absolutely permanent) என்று கூறப்படுகிறது. அதில் அசத்துத்தன்மை சிறிதுமில்லை. மாயையிலிருந்து உண்டான உலகங்கள் அவற்றின் சூக்கும தூலநிலைகளுக்குத் தக்கவாறு குறைந்த ஒளிப்பிரகாசமுடையவைகளாயிருத்தல்பற்றிப் பிரகாசமும் அப்பிரகாசமுமுடையவையாயிருத்தலின் அவையெல்லாம் மாயையை நோக்க அசத்து (relatively permanent) என்று கூறப்படுகின்றன. தோன்றிய பொழுது சிறிதுகாலவெல்லை உள்ளனவாகிய நீர்மேலெழுத்து, கனாக்காட்சி, பேய்த்தேர் என்ற மூன்றுஞ் சடுதியில் மறைந்து போம் தன்மைபற்றி அசத்து என்று கூறப்படினும், அவை சிறிதுகாலவெல்லையில் நிலைத்திருக்கும் பொருட்டன்மைபற்றி சத்து என்றுங் கூறப்படுகிறது. நீர்மேலெழுத்து முதலியன அவை நிகழுங்கால் மெய்யே (சத்து) அன்றி ஏகான்மவாதி

கூறுகிறபடி பொய் (அசத்து) அன்று. கனவிலொருவன் புலி யொன்றைக் கண்டு அச்சமிக்குடையவனனபொழுது, அவ் வநுபவக்குறி அவன் தூல உடம்பினும் காண்டலால் கனக் காட்சி மெய்யென்பது துணியப்படும்.' அதுபோலத் தோன்றி மறைவதாயுள்ள தூலஉலகம் அதன் நிலையாமைத் தன்மை பற்றி அசத்து என்று கூறப்படினும் அதன் பொருட்டன்மை பற்றிச் சத்து என்றுங் கூறப்படும். தூல உலகத்தின் பொருட் டன்மையானது, சற்காரியவாத உண்மைப்படி, என்றும் உள் ளது என்பதை நீ யறிவாயாக.

32. மேலே கூறப்பட்ட கருத்துக்களை யெல்லா முள் ளடக்கி ஆசிரியர் "அவை தாம் பிரகாசமாய் நின்றே அப் பிரகாசமாய் நிற்றலான்" என்று ஏதுவைச் சுருங்கிய சொற் களாற் கூறினர். வழி நூலாசிரியரும் "மண்டணிலரசர் வாழ் வும் வானத்தரசயன் மாலார் வாழ்வும்—எண்டரு பூதபேத யோனிகளியாவுமெல்லாம்—கண்டவிந்திரமாசாலங்களைக் கழு திரதங்காட்டி—உண்டுபோலின்றாம் பண்பினுலகினை யசத்து மென்பர்" என்று கூறினர். இச்செய்யுளில் வரும் 'அசத் தும்' என்ற எதிர்மறை உண்மையால் சத்தும் ஆகும் என்பது பெறப்படும்.

33. இங்ஙனம் சைவசித்தாந்த உண்மைக்கு மாறு பாடாயுள்ளனவாகிய நையாயிகர் கொள்கையும் சாங்கியர் கொள்கையும் கூறப்பட்டு மறுக்கப்பட்டன. வைசேடி கரும், நையாயிகரைப்போல ஏறக்குறைய ஒத்த தத்துவக் கொள்கைகளை உடையவர் ஆதலின் மறுக்கப்பட்டவர் ஆவர். கிரேக்கர் ஆகிய 'அரிஸ்டாட்டில்' (Aristotle) ஐரோப்பா நாட்டுக்கு அளவை நூலறிவு உதவியதுபோல நையாயிகரும் வைசேடிகரும் தத்துவநாடு ஆகிய நமது இந்தியா நாட்டுக்கு வடமொழியில்* அளவை நூல்கள் எழுதி உதவியவர். சாங் கியர் தத்துவக்கொள்கைகளிற் சில வடமொழிப் பகவத் கீதை (அத்தியாயம் II சுலோகங்கள் 11—39) யிலும் வட மொழி மகாபாரதத்திலும் (XII, 1107, 1198) மைத்திரேய உபநிஷத்திலும் (III, 2, 5) கூறப்பட்டிருக்கின்றன. சாங்கி யருடைய சற்காரியவாதம் பகவத்கீதை இரண்டாவது அத் தியாயம் பதினறுவது சுலோகத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

---

* The Hindu syllogism of five parts is more complete than the Aristotlean system of three parts" (P. 226: Six Systems of Philosophy by Maxmuller.)

† No Knowledge is equal to that of the Sankhyas, no power to that of the yogas.

இத்துணைச் சிறப்புக்களை உடைய இந்த மூன்று தத்துவக் கொள்கையரும் பிரகிருதிமாயைக்குச் சேர்ந்த இருபத்திறைறு தத்துவங்களை அறிவாரேயன்றி யதற்கு மேலேயுள்ள வித்தியா தத்துவக் கூறுபாடுகளையும், சிவதத்துவக் கூறுபாடுகளையும் அறியார். ஆதலின் அவர்கள் தங்கள் ஆராய்ச்சி அறிவு அளவில் அசத்தினிலக்கணத்தை ஒருவாறு அறியவல்லவரே அன்றி முப்பத்தாறு தத்துவங்களுக்கு மேற்பட்டு மெய்யறி வருடைய அநுபவ மெய்யறிவில் விளங்கக்கூடிய சத்தினிலக் கணத்தை அறியவல்லவரல்லர். அதுபற்றி ஆசிரியர் தாங் கூறிய எடுத்துக்காட்டு வெண்பாவில் "மெய்கண்டான் ஆரா யின்" என்றும் "(மெய்கண்டான்) ஓரின்" என்றும் கூறினர் என அறிக. இங்ஙனமாகலின் இம்மூன்று தத்துவக்கொள்கை யரும் அடுத்த இரண்டாவது அதிகரணப்பொருளை உணா மாட்டார் என்பது குறிப்பிடப்பட்டது.

---

# பப்பு

பப்பு என்பது பரப்பு. பரப்பு என்றால் பரவுதல். பரவுதலாவது சொற் பலகூறிப் பலபடப் புகழ்தல். இப்புகழ்ச்சி வஞ்சப்புகழ்ச்சி யாங்கால் பகடிபேசி ஏமாற்ற முயலல் என்று பொருள்படும். "ஏமாற்றம்" என்னும் இப்பொருளில் வருவது குறித்தே "அந்தப் பப்பு பலிக்காது" என்னும் வழக்குத் தமிழில் தோன்றியிருத்தல் வேண்டும். நிற்க,

தெலுங்கில் பப்பு என்றால் பருப்பு என்று பொருள்படுவது கண்டு அப்பொருளே அடிப்படையாக "அந்தப் பப்பு வேகாது" என்றும் "வல்லத்துப் பப்பும் வல்ஙிமான் தண்ணீரும்" என்றும் வழங்குவன பொருள் மயக்கமேயாகும்போலும்.

—(கா. சிவ. க.)

---

## ஆராய்ச்சிப் பகுதி : Research

# இளங்கோவும் பாவிகமும்

[வித்துவான் S. ஆறுமுக முதலியார், எம். ஏ., எல். டி.]

(முன் கஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

கற்புடைமை என்னும் பெயரைக்கேட்ட அளவிலேயே அது பெண்ணுக்குத்தான் பொருந்துமென்றும், பெண்களே கற்புடையரா யிருத்தல் வேண்டுமென்றும் சில அறிவிலிக ளாகிய குணக்கேடர்கள் பிதற்றித் திரிகின்றனர். சிறிது கூர்ந்து நோக்கின் ஒழுக்கமுடைமை அல்லது கற்புடைமை யென்பது, ஆண், பெண், முதியோர், இளைஞர், இல்லறத்தோர், துறவறத்தோர் முதலிய எல்லோர்க்கும் இன்றியமையாதென் பது விளங்கும். ஆசிரியர் திருவள்ளுவனார் கருத்தும் இதுவே யாகுமென்பர். நற்குடிப் பிறப்பினும் கற்புச் சிறப்புடையது; மயக்கம் நீங்கிய அறிவினையுடைய ராகும்படி செய்வது கற்பு; சொன்னசொல் தவறாமையே கற்பு என்ற பொருள்களை முறையே தரவல்ல, "குலனுடைமையிற் கற்புச் சிறந்தன்று," "இருள்தீர்ந்த கண்ணராச் செய்வது கற்பு," "கற்பெனப் படுவது சொற்றிறம்பாமை" என்ற ஆன்றோர் மொழிகளை நோக்கின், கற்பு பெண்பாலுக்கே உரியதன்றி ஆண்பாலருக் குரியதன்றாம் என்பது எவ்வாறு பொருந்தும்? மயக்கம் நீங்கிய அறிவும், சொல்தவறாமையும் பிறகுணங்களும் ஒவ்வொரு வருக்கும் இன்றியமையாதனவாயிருக்க, கற்பு பெண்பா லுக்கே உரியது என்று கூறுவது தகுமோ?

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணி தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

'அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை, யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று"

"மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்"

என்னும் குறள்கள் கற்புடைமையை இல்லற துறவற நெறி நிற் போருக்கும் பெண்களுக்கும் தொகுத்துக் கூறுவன.

"ஒழுக்கம் விழுப்பந் தரலால் ஒழுக்கம்
உயிரினு மோம்பப் படும்"

என்பது ஒழுக்கமுடைமை அனைவர்க்கு முரியதென்பதைக் காட்டுவதாகும்.

12. கற்புடைமை என்னுஞ் சொல் கற்றவாறு ஒழுகும் ஒழுக்கம் என்னும் பொருளைத் தருகின்றது. ஆண் பெண் ஆகிய இருபாலாரும் கற்கவேண்டியவற்றை ஆசிரியர், பெரியோர், தாய்தந்தையர், கணவர் முதலிய பெரியோரிடம் கசடறக் கற்று, அதற்குத்தக நிற்றல் வேண்டும். இவ்வொழுக்க முறையை, ஆன்றோர் ஆண்பாலருக்கு அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்றும், பெண்பாலருக்கு நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்றும் வகுத்துக் கூறுகின்றனர். இவ்விரு திறத்தாருள்ளும் கற்பில்லாதவர் ஒருவாற்றானும் மேம்பாடடையார் என்க.

13. நம்நாட்டில் மக்கள் பண்டுதொட்டு இன்றுகாறும் ஒழுக்க மேம்பாடும் குணநலமும் ஒருங்கே வாய்க்கப்பெற்றுச் சிறந்த ஒழுக்க சீலர்களாக இருந்து வருகின்றனர். பலமொழி இலக்கியங்களைக் காட்டிலும் அதிகமாகத் தமிழ் இலக்கியத்தில் உலகமுழுவதும் ஒப்புக்கொள்ளக் கூடிய திருக்குறளும், நாலடியார், நன்னெறி, நல்வழி போன்ற அறவுரை நூல்களும் மல்கிக்கிடப்பது இதற்கொரு சான்றுமாகும். மக்களது உள்ளக்கருத்தை உள்ளபடி வெளிக்காட்டுவது அன்னார்தம் நூல்களல்லவோ? ஒரு நாட்டாரின் நூல்களே அன்னார்தம் நாகரீகத்தையும், உயர்ந்த குறிக்கோள்களையும், பழக்கவழக்கங்களையும் பிறவற்றையும் பிரதிபிம்பித்துக் காட்டும் கண்ணாடியாகும். கடைச்சங்க இறுதிக்காலத்தில் எழுந்த சிலப்பதிகாரத்தினின்றும் கற்புடைப் பெண்களுக்கெல்லாம் எடுத்துக்காட்டாய்த் திகழும் கண்ணகி தேவியின் தெய்வத்தன்மையும், கற்புடைமையும், வீரச்செயல்களும் விளங்கும். இக்கற்புக்கரசியை மக்கள் அன்றும் “கற்புடைத் தெய்வம்” என்று போற்றிப் புகழ்ந்து, கோயில் சமைத்துத் தெய்வமாகப் பரவிப் பயன் பெற்றனர். இன்றும் கண்ணகியைக் கற்புடைத் தெய்வமெனப் பொற்புடன் போற்றுகின்றோம்.

14 கணவன் மாட்டுக் கரைகடந்த அன்புடையளாய்த் தன் கற்புடைமைக்கு ஏற்ப, தக்கமுறையில், தக்கசமயத்துத் தன் கணவன் குற்றத்தை அறிவுறுத்தவேண்டிய இடத்து அறிவுறுத்தி, தான் கணவனையன்றிப் பிறதெய்வம் பேணாதவள் என்பதையும், கற்புடைப்பெண் தெய்வத்தன்மையுடைவள் என்பதையும், பிற பெண்கள் செய்யமுடியாத வீரச்செயல்களையும் செய்யவல்லள் என்பதையும் எவ்வாறு கண்ணகி தன் வாழ்க்கையின் மூலம் உலகுக்கு எடுத்துக்காட்டினாள் என்று, இளங்கோ அமைக்கும் விதத்தை நோக்குவோம், அவர் முற்கூறியபடி,

" அரைசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉ
முரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலு
மூழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்."

உலகத்தாருக்குக் காட்டவேண்டியே கண்ணகி வரலாற்றை எழுதினார் என்பது நாமறிந்ததொன்றே. தமிழன்னையின் திருவடிச் சிலம்பாகிய இதனை மக்களின் செவியகத்தே என்ஞான்றும் ஒலித்துக் கொண்டிருக்குமாறு சிலப்பதிகாரம் என்னும் பெயரால் ஆசிரியர் அமைத்தனர் என அறிஞர் கூறுகின்றனர். மூன்று நீதிகளை அவர் நூலுக்கு உள்ளுறையாகக் கொண்டனரேனும் இடைக்கண் நின்றதாகிய "பத்தினியை உயர்ந்தோர் ஏத்தல்" என்பதிலேயே அவர் பெருநோக்குடையார் என்று தோன்றுகிறது.

15 காவியம் முழுவதும் ஊடுருவிச்செல்லும் ஒரு பாவிகமாகக் கண்ணகியின் கற்புடைமையையும் தெய்வத் தன்மையையும் ஆசிரியர் அமைத்துள்ளது, பல்லாற்றானும் வெளிப்படுகிறது. கண்ணகியின் செயல்களாலும், அவள் கற்புடமையைப்பற்றி கவுந்தியடிகள், கோவலன், ஐயை, தேவந்தி முதலியோர் உயர்த்திப்பேசி சான்றுபகவர்வதாலும், கண்ணகியின் வீரமுழக்கத்தில் வரும் மொழிகளாலும், அரசர்கள் அவளைத் தெய்வமாக்கிச் சிறப்பித்தலாலும் பிறவற்றாலும் இப்பாவிகம் புலப்படுத்தப்படுகிறது.

" உயிரினுஞ் சிறந்தன்று நாணே, நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று "

என்னும் தொல்காப்பியர் இலக்கணத்துக்குக் கண்ணகி இலக்கியமா யமைக்கப் பட்டுள்ளாள்.

16 நூல் தொடக்கத்தில் பதிகத்தின் பின்னர் வரும் உரைபெறு கட்டுரையில் தமிழ் நாட்டரசரும், கடல் சூழிலங்கைக் கயவாகு மன்னனும் கண்ணகியைத் தெய்வமாகவே கொண்டு கோட்டஞ் சமைத்துத் திருவிழா முதலியன புரிந்த தன்மையையும், அதனால் அந்நாடுகளில் மழைவளம் பெருகி நோயுந் துன்பமும் நீங்கினமையையும் ஆசிரியர் கூறியது, கண்ணகியின் கற்புடைமையைப் படிப்போருள்ளத்தில் முதற் கண்ணேயே பதியவைத்தற்காம். கோவலன் கொலையுண்ட பின் வையைக்கரைவழியே மலைநாடு புக்குத் திருச்செங்குன்று என்னும் மலையையடைந்து தெய்வ வடிவத்துடன் வந்த கோவலனுடன் வானவூர்தியேறிச் சென்றபின் நிகழ்ந்த, கோயில் சமைத்து விழாக்கொண்டாடியதைத் தொடக்கத்திலேயே ஆசிரியர் கூறிவைத்தது கண்ணகியின் கற்புடைமை புலப்படுவதற்கே. அடியார்க்கு நல்லாரும் மங்கலவாழ்த்துப்

பாடலுரைக்கண் "கண்ணகியை முற்கூறினார், பத்தினியை யேத்துதல் உட்கோளாகலான்" என்றனர்.

17. காவிரிப்பூம்பட்டினத்தில் பெருஞ்செல்வமும் வண்மையும் படைத்த மாநாய்கனுகிய "பெருங்குடி வாணிகன் பெருமட மகளாய்"ப் பிறந்து உருவிலுந் திருவிலுங், குண மேன்மையிலுந் தலைசிறந்து விளங்கி, பெண்களுக்கெல்லாம் எடுத்துக் காட்டாய்த் திகழ்ந்து அரசரோடு ஒருங்கு வைத்து எண்ணத்தகும் செல்வமும், ஈகையுமுடைய மாசாத்துவானின் மகனாய்த் தோன்றிய கோவலனின் மனைக்கிழத்தியாய் இல்லறம் நடாத்தி, பல இடையூறுகளுற்று, மதுரையிற் கணவனைப் பறிகொடுத்துக், கற்பின் திறத்தால் மதுரையை எரித்து, மலைநாடு புக்குக் கணவனோடு விண்ணுலகேறிய கண்ணகியினது கற்பின்றிறத்தையும் வீரச் சரிதையையும் அறியாதார் நம் நாட்டிலுளரோ?

18. இப்பத்தினித் தெய்வம் வீரபத்தினியாய் விளங்கிற்று. கண்ணகியின் வீரக்கற்பின்முன் பாண்டியன் நெடுஞ்செழியனும் நிற்க வல்லனல்லன் என்றால், பின் என் சொல்வது? கோவலன் கொலையுண்டபின், கண்ணகி பொறுக்க முடியாத துயருற்றுத் தெய்வமுற்றாள் போன்று ஆயினள். அப்பொழுதைய நிகழ்ச்சிகள் மக்கட்டன்மையில் வைத்து ஆராய்தற் குரியனவல்ல. எனினும் அந்நிகழ்ச்சிகள் கண்ணகியை உலகத்தார் அறிந்துகொள்வதற்கும், வீரபத்தினி என்று கொண்டாடுவதற்கும் காரணமாயிருந்தன. அவற்றுள், கண்ணகி காய்கதிர்ச் செல்வனை விளித்துக் கூப்பிட்டுத் தன் கணவன் குற்றவாளியோ என்று கேட்ட வீரமுழக்கமும், அரசன் முன் அஞ்சாது சென்று நின்று, அவனை நற்றிறம்படராக் கொற்கை மன்னனென்றும் தேராமன்னனென்றும் இடித்துரைத்து வழக்காடிப் பெற்ற வெற்றியும், பத்தினிப் பெண்களைக் கூவியழைத்துக் கூறிய நெடுமொழியும் மதுரையை எரியகப்படுத்தியதும் நினைக்க நினைக்க நம்முள்ளத்தைக் கலக்குகின்றன. "ஆரஞருற்ற வீரபத்தினி" என்று ஆசிரியர் கண்ணகியைப்பற்றிக் கூறுவது முற்றிலும் பொருத்தமுடையதே.

19. இனி, எரிக்கடவுள் அந்தண உருவந்தாங்கி வந்து யார்யாரை அழிக்கவேண்டும் என்று கேட்டு அவள் பணித்த வழிநின்றதும், மதுரைத்தெய்வம் தோன்றி அவள் பழம்பிறப்புணர்த்தியதும், காய்கதிர்ச் செல்வன் நின் கணவன் குற்றவாளி யல்லவென்று மறுமொழி கூறியதும் கற்புடை மகளிரின் உரைவழி தெய்வங்களும் நிற்கும் என்னும் உண்மையைப் புலப்படுத்துகின்றன. பின்னர், கண்ணகி சேரன் செங்குட்டு

வனுக்குத் தெய்வவடிவத்தோடு வஞ்சியில் வெளிப்பட்டுக் காட்சிகொடுத்ததோடு, ஆரிய மன்னருக்கும், மாளவ வேந்தனுக்கும், கயவாகு மன்னனுக்கும் அவர்கள் பூசையில் எழுந்தருளி அருள்செய்வேனெனக் கூறினாள். மீட்டும் தேவந்திமேல் வெளிப்பட்டு இளங்கோவடிகளின் வரலாற்றைக் கூறினாள். இவையெல்லாம் தன்னை வழிபடுவோர்க் கருளும் தெய்வமாயினாள் கண்ணகி என்பதைப் புலப்படுத்துகின்றன.

20. இவை போக, கற்புக் காரணமாகக் கண்ணகியிடத்தில் சிறந்து விளங்கிய வேறு குணங்களையும் ஆசிரியர் ஏற்ற முறையில் புலப்படுத்துகின்றன ரன்றோ? கற்புடைமகளிர், தம் கணவர் தம்மைவிட்டுப் பிரிய ஆற்றார். அதுவும் தங்கணவர் பரத்தைபாற் பிரிந்தனர் என அறியின் அவர்களுக் குண்டாகும் செற்றமும், சினமும், ஊடலும் கூறும் தகையன அல்ல. தமக்குரிய உடனுறை இன்பத்தைப் பிறர் பெறுவதோடு, தம் கணவரின் ஒழுக்கக் கேட்டையும் அதனால் தம் மனையறத்துக்கு நிகழ்ந்த பழியையும் உள்ளுங்கால் அவர்கள் உள்ளம் உருகாதோ? கோபத்தீ பொங்கி எழாதோ? ஆனால், இந்நிலையில் கண்ணகியின் நடை எவ்வாறிருந்தது? மாதவி என்னும் கணிகை வயத்தனாய்க் கோவலன் கண்ணகியைப் பிரிந்துசென்று அவள் தன் எண்ணரிய கலன்களைக்கொண்டு போய் மாதவிக்குக்கொடுத்துத் தன் "குலந்தரு வான்பொருட் குன்ற"த்தை முற்றிலு மழித்தான். "கண்டா ரிகழ்வனவே காதலன்றான் செய்திடினும்" கொண்டானைத் தம்முல்லை சான்ற கற்பால் பொறுத்தாற்றுவதன் மூலமாகவே தன் பக்கம் திரும்பிய பெருமை கண்ணகிக்கே உரியது. பொறுமைக்கு அணிகலனாகிய கண்ணகி கணவன் பிரிவாற்றாமையினால் தான் உற்ற வருத்தமிகுதியைப் பிறரறியாதபடி வெளிக்குக் காட்டாமல் மறைத்து வைத்துக்கொண்டிருந்தாள். அதோடு பொருள் அனைத்தும் இழந்தானாய் வீடுதிரும்பிய கணவனைக் கண்ணகி கோபித்து வெருட்டி அனுப்பினளோ? அன்று. தன் அன்புள்ளத்தால் பிணித்து, அவன் மனம் மாறும்படி செய்தாள். "சலம் புணர்கொள்கைச் சலதியோடாடிக், குலந்தருவான் பொருட்குன்றந் தொலைத்த, இலம்பாடு நாணுத் தருமெனக்கு"......என் றன்பாற் கழிவிரங்கிக் கூறிய கணவனுக்குக் கண்ணகி, "நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டி" சிலம்புள, கொள்ளும் என்றனள். அச்சிலம்பைப்பெற்று மீட்டும் மாதவிபாற்செல்லுந் துணிவு இந்நிலையிலும் கோவலனுக்கு ஏற்படுமோ? இச்சொல் அவன் உள்ளத்தை ஊடுருவிப் பாய்ந்தது. அன்றுமுதல் வேறு கோவலனாக மாறிவிட்டானன்றோ?

(தொடரும்)

# அறிவியற் பகுதி - Science

## ஊமைகளைப் பேசுவித்தல்

[திரு. S. நடராஜன் அவர்கள் B. A,. L. T.]

### முன்னுரை

இருபதாம் நூற்றூண்டில் மக்கள் கண்டுள்ள புதுமைகள் பல. இவற்றுள் ஊமைகளைப் பேசச்செய்வதும் ஒன்று.

இக்காலத்தில், இயற்கையில் ஊமைகளாய்ப் பிறந்துள்ள குழந்தைகளுக்கு ஒரு தனிப்பட்ட முறையில் கல்வி கற்றுக் கொடுத்துப் பேசப் பழக்கப்பட்டு வருகிறது. மேனுடுகளில் சிறப்பாக அமெரிக்கா தேசத்தில் ஊமை மாணவர்கள் சில காலம் அவர்களுக்கு என்று ஏற்பட்டுள்ள தனிப் பள்ளிகளில் பயின்று பின்னர்ப் பொதுப் பள்ளிக்குச் சென்று உயர்தரக் கல்வியும் பெறுகிறுர்கள். நம்நாட்டில் சில காலமாக ஊமைகளுக்குக் கல்வி போதிக்கப்பட்டு வருகிறது.

முதல் முதலாக நம் நாட்டில் இத்துறையில் தீவிரமாய் இறங்கியவர்கள் வங்காளிகளே யாவர். கல்கத்தாவில் இருக்கும் ஊமைப்பிள்ளைகள் பள்ளிக்கூடம் 1893-ம் ஆண்டில் நிறுவப்பட்டது. நம் நாட்டில் இது காலை 25 பள்ளிக்கூடங்கள் ஊமை மாணவர்களுக்குப் பணியாற்றி வருகின்றன.

தென்னுட்டில் முதல் முதல் இத்துறையில் இறங்கியவர்கள் கிறித்தவ மிஷனரிகள். இவர்கள் சுமார் 1901-ம் ஆண்டில் C. E. Z M. சார்பில் பாளையங்கோட்டையில் ஒரு பள்ளிக்கூடம் தொடங்கினுர்கள். இந்தியநாட்டில் இம்மாணவர்களுக்குப் பள்ளிக்கூடங்கள் மிகச் சொற்பமே எனினும், இவை நல்ல தொண்டாற்றிவருகின்றன.

ஊமைகளுக்குக் கல்வி போதிப்பதென்பதையும், அவர்களுக்கு அவர்கள் இழந்து தவிக்கும், பேச்சுக் கற்றுக்கொடுக்கக் கூடும் என்பதையும் பொதுமக்களுக்கு எடுத்து விபரமாகக்கூறப் போதிய வசதி கிடைக்கவில்லை. ஆங்காங்கு அவ்வப்போது சிற்சில ஆசிரியர்களும் பிறரும் செய்துள்ள சொற்பொழிவுகள் தவிர கட்டுப்பாடாகச் செய்தித் தாள்கள் வாயிலாய் இப்பொருள்பற்றிப் பொதுமக்கள் கவனத்திற்கு

கொண்டுவரும் கட்டுரைகள் வந்தில. ஈண்டு நம் சேந்தமிழ்ச் செல்வி இப்பணிக்கு இடந்தந்து, புலன் குறைந்து வருந்தும் மக்கள் இனத்திற்குத் தொண்டு புரிய முன்வந்துள்ளமை சாலவும் பாராட்டத்தக்கதாம். அன்பெனும் இத்தூண்டு கோல் காரணமாக, சென்ற 12 ஆண்டுகளாய் ஊமை மாணவர்களுக்குக் கல்வி போதித்து வந்துள்ள எமது அநுபவங்களைச் செல்வியின் மூலம் வெளிப்படுத்த எண்ணியுள்ளோம்.

## 1. ஊமைகள் யார் ?

ஊமைகள் யார் ? இவ்வினா வியப்பாகத் தோன்றலாம். ஏன் எனில் நாம் யாண்டும் ஊமைகளைக் காண்கின்றோம். பொதுவாக "வாய் பேசாதவன் ஊமை" எனக் கேட்டும் படித்தும் இருக்கிறோம். ஊமை ஏன் பேசாது இருக்கிறான் ? இவ்வினா சாலவும் நகைப்பைத் தரலாம். ஊமையாகப் பிறந்ததால் ஊமையாய் இருக்கிறான் என விடைதந்து வினவியவரை எள்ளி நகையாடலாம். நாம் எப்படிப் பேசக் கற்றுக்கொள்கிறோம் என ஒரு நிமிடம் சிந்தித்தால் இவர்கள் ஏன் ஊமையாய் இருக்கிறார்கள் என்பது எளிதிற் புலப்படும். நாம் ஒவ்வொருவரும் சீனதேசத்துப் பாஷைகளுக்கு ஊமைகளேயாவோம் ! நமக்கு அம்மொழி பேசத் தெரியாது. ஆண்டுச் சென்றாலும் நம் தேவைகளைத் தெரியப்படுத்த ஊமைச்சாடையே காட்டுகிறோம். அத்தேய மக்கள் பேசுவது நமக்கு விளங்குவதில்லை. ஏன் ?

நாம் எவ்வாறு பேசக் கற்றுக்கொள்கிறோம் எனச் சற்றுக் கவனியுங்கள். ஐம்புலன்களும் நிறைவுபெற்று வளர்ச்சியுற்றுப் பிறந்த ஒரு குழந்தையை எடுத்துக்கொள்வோம்.

இவ்வுலகில் பிறந்ததும் அஃது என்னசெய்யத் தொடங்குகிறது ? கீழே குழந்தை தரையில் விழவும், சத்தமிடுகிறது. அதன் மெய்யுணர்வும், காதும் வேலைசெய்யத் தொடங்குகின்றன. பின்னர்க் கண்ணும், நாவும், மூக்கும் [வாசனை அறிதல்] தத்தம் வேலையைச் செய்கின்றன. இக்குழந்தையானது தன்னைச் சுற்றித் தாய் தந்தையரும், உற்றாரும், மற்றோரும், பேசும் குரலைக் கேட்கின்றது. இக்குரல் குழந்தையின் காதின் வழியே மூளையை அடைகிறது. மூளையில் ஐம்புலன்களுக்கும் தனித்தனியே ஐந்து இடங்கள் இருக்கின்றன. இவ்விடங்கள் புலன்களின் வழிவரும் செய்திகளை வாங்கி அவைகளைப் பகுத்து அறிகின்றன. பகுத்து அறிந்த செய்தி குழந்தையின் அறிவாகும். இவ்வறிவின் தன்மையைப் பொறுத்தே அதின் வெளிச்செயல்கள் நிகழும்.

இதற்கு எடுத்துக்காட்டு ஒன்று கூறுவோம். தமிழர் வீட்டிற்பிறக்கும் குழந்தை தாயை "அம்மா" என அழைக்கிறது. ஆங்கிலேயர் வீட்டில் பிறந்த குழந்தை தன் தாயை "மம்மா" (Mamma) என அழைக்கிறது. இதற்குக் காரணம் என்ன? தமிழர் வீட்டில் பிறந்த குழந்தை "அம்மா" என்ற சத்தத்தைக் கேட்கின்றது. இச் சத்தமாகிய செய்தியானது காதின் வழியே பல முறையும் மூளையிலுள்ள கேள்விமையத்தை (Hearing Centre) அடைகிறது. இங்கு மூளையால் இச் சத்தம் பகுத்தறியப்பட்டு, குழந்தை "அம்மா" என்ற சத்தத்தைக் கண்டுகொள்கிறது. பின்னர் "அம்மா" எனத் திரும்பத் திரும்பச் சொல்லிப் பழகுகிறது. "அம்மா" என்பதைப் பிழைபடக் குழந்தைகள் பலமுறை மழலை மொழிவதை நாம் கேட்டானந்தப்படுகிறோமன்றோ! பின்னர் "அம்மா" எனக் குழந்தை அழைக்கும்போது தாய் திரும்பிப் பார்க்கின்றாள். குழந்தைதான் சொல்லும் "அம்மா" என்றவொலி தன் தாயின் கவனத்தை இழுத்துத் தன் பசி ஆற்றுவதை உணர்கிறது. பின்னர் "அம்மா" என்ற சொல்லின் பொருள் முழுவதும் அறிந்து தன் பேச்சில் "அம்மா" என உபயோகப்படுத்துகிறது. இவ்வாறே ஆங்கிலேயர் வீட்டில் ஆங்கிலமும், தெலுங்கர் வீட்டில் தெலுங்கும், சீனர் வீட்டில் சீனமும் பேசக் குழந்தைகள் கற்றுக்கொள்கின்றன. பேசுவதற்கு நாம் முதலில் சத்தத்தைக் கேட்கவேண்டும். இரண்டாவதாகச் சத்தத்தைப் பகுத்து அறிய வேண்டும். மூன்றாவதாக அதைச் சொல்லிப் பழகவேண்டும். இம்மூன்று நிகழ்ச்சிகளும் முறையே இயற்கையின் உதவியால் நடைபெற நாம் பேசுகிறோம். ஒருவன் காதில் விழாத ஒரு மொழியை ஒருவன் பேசமுடியாது எனத்திட்டமாகக் கூறலாம். நாம் காதின் வழியே பேசக் கற்றுக்கொள்கிறோம். ஏனைய நாடுகளுடன் ஒப்பிடும்போது நந் தமிழ் நாடு பரப்புக் குறைந்தது எனலாம். இங்கு வடதிசையில் பேசும் தொனிக்கும், தென்றிசையில் திருநெல்வேலியில் பேசும் தொனிக்கும் வேறுபாடுகள் காண்கின்றன. இதற்குக்காரணம், செவியேயன்றோ!

இது காறும் கூறியவாற்றால் செவியின் மூலம் நாம் பேசக் கற்கின்றோம் என்பது தெளிவுபெறும். ஒருவன் பிறவியில் கருவிலோ, கருவுயிர்க்கும் பொழுதோ அல்லது கருவுயிர்த்த உடனே, செவிடானால் அவன் பேச்சைக் கேட்கக் கூடாமையால், பேசும் தன்மையை முழுதும் இழந்து ஊமையனாகின்றான். சில குழைந்தைகள் 3 வயது 4 வயது வரை காது கேட்டு மழலை பேசி, விளையாடியிருந்து பின்னர் அம்மை, மலேரியா, முதலிய நோய் வாய்ப்பட்டும்;

கீழேவிழுதல், கன்னத்தில் அடிபடுதல் முதலிய எதிர்பாரா நிகழ்ச்சிகளாலும் செவிடானால் அவர்களும் ஊமையாய் விடு கிறார்கள்.

அமெரிக்கா நாட்டில், இடையில் உண்டாகும் செவிட்டி னால் ஊமையாய் உள்ளவர்களைப்பற்றிக் கணக்கெடுத்துள்ள புள்ளி விபரங்களைப் படித்தபொழுது அங்கு 10 வயதிற்குள் ஒருவன் செவிடானால் அவன் கற்ற பேச்சையும் இழந்து ஊமையனாய் விடுகிறான் எனக்கண்டோம். இக்கூற்றுக்கு எடுத்துக்காட்டாக எம்முடைய 12 ஆண்டுப் பழக்கத்தில் இரண்டு இடத்தில் காணநேரிட்டது. மதுரைமா நகரில் உள்ள ஊமைப் பிள்ளைகள் பள்ளிக்கு 7 வயதுசென்ற ஒரு மாணவன் ஒரு நாள் கொண்டுவரப்பட்டான். அவன் 6 வயது வரை நன்றாய்ப் பேசிக்கொண் டிருந்தவன். அந்நகரின்கணுள்ள சேதுபதி உயர்தரக் கலாசாலையில் ஆரம்ப வகுப்பில் பயின்ற வன். அவன் தந்தையும் அப்பள்ளியில் ஆசிரியராய் இருந்த வர். அவனது ஆறும் வயதில் அம்மை கண்டதாயும், அவ் வம்மைநோய் அவனது கேட்கும் சத்தியைக் கொள்ளை கொண்டு விட்டதாயும், அம்மை குணமானதில் இருந்து பையன் செவிடனாய் வரவரத் தன் தேவைகளை சாடைகாட்டித் தெரியப்படுத்தத் தொடங்கி ஊமையாய் விட்டான் எனத் துயரத்துடன் அவன் தந்தை கூறினார். இரண்டாவதாக, கோவைமா நகரில் உள்ள ஊமைப் பிள்ளைகள் பள்ளிக்கு 4 திங்கட்கு முன்னர் ஒரு மாணவன் கொண்டுவரப்பட் டான். இவன் வயது 11. இவன் பத்தாம் வயதுவரை இந்நகரி லுள்ள ஆரம்ப பாடசாலையில் மூன்றாவதுவரை படித்ததாக வும், பின்னர் மலேரியாக் காய்ச்சலின் காரணமாகச் செவி டானதாயும், செவிடானதிலிருந்து சாடைகாட்டி வருவ தாயும் இவன் பாட்டனார் கூறினார். இம்மாணவனும் பள்ளி யிற் சேர்த்துக்கொள்ளப்பட்டுத் தனிமுறைப்படி கல்வி பயின்று வருகின்றான். காது கேளாமையால் ஒருவன் ஊமை யாகிறான் என்பதற்கு இவைகளே போதிய சான்றாம்.

உள்நாக்கு இல்லாததால் ஒருவன் ஊமையாகின்றான் என்ற தவறுதலான எண்ணம் மக்களிடையே நிலவக் காண் கின்றோம். பேசுவதற்கு வேண்டிய உறுப்புக்கள் ஊமைகளுக் குக் குறைவுபட்டனவாய் இல்லை. பேசுவதற்கு வேண்டிய உறுப்புக்களாவன:— குரல்வளை or சங்கு (Larynx), தொண்டை (Pharynx), உண்ணாவு (உள் + நாவு) (Epiglottis), அண்ணாவு (அண்ணத்தின் அடிப்பாகத்திலுள்ள நாவு) (Uvula), அண்ணம் (Palate), நா (Tongue), உதடு (Lip),

மூக்கு (Nose). பொதுவாக நாம் ஊமைகளென ஒதுக்கியுள்ள கூட்டத்தினரில் இவ்வுறுப்புக்களில் குறைகள் காணப்படுவதில்லை. ஊமைகள் நன்றாய்ச் சத்தமிடுவது அவர்களின் குரல்வளை நன்றாய் இருப்பதைக் காட்டுகிறது. உண்ணுவானது மனிதனுக்கு இன்றியமையா உறுப்பாகும். இது காற்றுக் குழாயை (Wind Pipe) மூடுவதற்காக ஏற்பட்டுள்ளது. இது சரியாய் இராவிட்டால் மனிதன் நோயின்றி வாழமுடியாது. இவ்விரு உறுப்புமே கட்புலனுக்கு எளிதில் தோன்றாதவை. மற்றவைகளைப் பார்த்த உடனே அவைகளின் மிகை, குறைவு அறிந்து கொள்ளலாம். ஊமைகள் என்று சொல்லப்படுவோருக்குப் பேசுவதற்கு வேண்டிய உறுப்புக்கள் ஈனமடையவில்லை. ஆனால் அவர்கள் ஊமையாய் இருப்பதற்குக் காரணம் காது கேளாமையே. இயற்கை அவனைச் செவிடனாக்கியது. சமூகம் அவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுக்காது ஊமையாக்கிவிட்டது.

ஒருவனுக்குக் காது கேளாவிட்டால் அவன் மிகவும் பரிதாபகரமான நிலையை அடைகின்றான்; விலங்குணர்ச்சிபெறுகின்றான். மனித உணர்ச்சி பெறுவது மிகவும் கடினமாகிறது. அறிவு வளர்ச்சிக்குச் சாலவும் இன்றியமையாத புலன் செவியேயாகும். செவிக்குறைவு செவிட்டுத் தன்மையையன்றி ஊமைத் தன்மையையும் உண்டாக்கி, அறிவையும் முனனேறவிடாமல் மனிதனை மாணிட விலங்கென வாழவிடுக்கிறது. இதனாலன்றோ நம் செந்நாப் போதாரும்,

"செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை"

எனக் கூறிப்போந்தார்!

காதிழந்து அது காரணமாய்ப் பேச்சிழந்து அவதியுறும் மக்கள் ஊமை எனப்படுவார் என நாம் அறிதல்வேண்டும். மேனாடுகளில் செவிட்டின் காரணமாய் ஊமையான இச் செவிட்டூமைகளை Deaf and Dumb எனக் கூறுவதில்லை. இவர்களுக்கென இருக்கும் தனிப்பள்ளிகளைச் சேவிடர் பள்ளிக்கூடம் (Schools for the Deaf) எனப் பெயரிட்டுள்ளார்கள்.

செவிடுகளில் பலவகைகள் காணலாம். அடுத்த அதிகாரத்தில் இவை விளக்கப்படும்.

(தொடரும்)

# "வீரரும் வீரரைப் போற்றலும்"

[திருமதி குணஜனுர்த்தனம் M. A., L. T.]

(ருக-ஆம் பக்கத் தொடர்ச்சி)

மற்றும் முதலெழு வள்ளல்களில் ஒருவனுகிய கன்னனும் உண்மை வீரனுக்கோர் உயரிய சான்ருவன். மாற்ருர்ப்க்கல் இருந்த கன்னன் தன்மகனென அறிந்த அவன்தன் அருமைத்தாய் அவன்பாற் சென்று, 'வருக என் மதலாய்! வந்து நின்னிளைஞர் ஐவரும் மனமொத்து நினக்கு ஏவலே புரிய தனிஅரசு செலுத்துவாய்', என மொழிந்தாள். ஆனல் கன்னன் அவள் மொழிக் கிசையாமல், 'இராசராசனுக்காகச் செருமுனைச் சென்று செஞ்சோற்றுக்கடன் கழிப்பதுவே யெனக்கினிப் புகழும், கருமமுந் தருமமும்;'' என்ருன். கன்னனும் கும்பகன்னனும் போரில் வெற்றியடைந்தார்களில்லையே! அவர்கள் போரில் தோற்றழிந்தும் அவர்களை வீரராகக் கருதுவதென்? உண்மை நெறியை உறுதிநெறியாக அவர்கள் ஒழுகினதாலன்ருே அன்னேரை யின்றும் இவ்வுலகம் போற்றிப் புகழ்கின்றது?

பண்டைக்காலத்து மன்னர்கள் எத்தகை வீரர்களாய் விளங்கினுர்கள்? அவர்கள் வீரம் என்னே! ஆற்றல் என்னே!! அவர்கள் இற்றைநாளைய போராகிய கொடும்போர் புரிந்தார்களல்லர். அந்தோ! ஒன்றுமறியாப் பசுங்குழந்தைகள் மீதும், பெண்கள் மீதும், இன்னும் எளியோர் மாட்டும் சினந்து சென்றனரா? தாம் படையெடுத்து வரும்போதே,

"ஆவுமானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கடனிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெருஅ தீரு
மெம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவ" லுவர் பண்டைவீரர்.

தன்வலிக்கு ஒப்பானவரிடத்திலே போரிடுதல் அறமென்றும் எளியோர்பால் எதிர்த்துச்செல்வது கொடுங்கோலையென்றும் உண்மை வீரன் எண்ணுவான். அஃதேபோல் நமது பண்டைய மன்னர்களும் ஒழுகிவந்தனர்.

மேலும் போருக்குச்சென்ற வீரன் தோல்வியுறின் வீடு திரும்பான். போரில் தோற்ருல் அப்போர்க்களத்திலேயே உணவின்றிப் பட்டினிகிடந்து உயிர்துறப்பதே வீரனுக்கு

அழகு எனக் கருதுவான். புறநானூற்றுச் செய்யுள்கள் பல இதற்குச் சான்று பகர்கின்றன.

இத்தகைய வீரரை விடுத்துத் தெய்வபக்தியிற் சிறந்து விளங்கிய வீரரைச் சிறிது ஆராய்வாம். ஆண்டவன்பால் அன்பு மேலிட்டுத் தெய்வத்தொண்டு புரிபவர் எங்ஙனம் வீரராவர் என ஐயுறலாம். வீரம் என்பதின் உண்மைப் பொருளை உன்னுவீர்களாயின் அவ்வாறு நினைக்க இடமிராது. உண்மையெனக் கண்ட நெறிபற்றிப் போகுங்கால் இடையூறுகள் பல நேர்ந்த போழ்தும் அந்நெறியினின்று சிறிதும் பிறழாது இருப்பதே வீரமாகும். தம்பக்தியின் பொருட்டு அல்லல் பட்டவர் எத்துணைபேர்! வீரமென்னும் ஓர் உயரிய பண்பு அவர்பால் வேரூன்றியிருந்ததாலன்றோ அத்துணை ஊறுகளுக்கும் ஈடுகொடுத்து மனந்தளராமலிருந்தனர்?

நால்வருள் ஒருவராகிய அப்பரின் அருஞ் சரிதையினைக் கருதுவாம். அவர் முதலில் சமணராயிருந்து, பின்பு தந் தமக்கையாரின் திருவருளால் சைவப்பெரியாராயினர். இப்படிச் சைவரானதை யறிந்த சமணர்கள் வெகுண்டு அரசனிடம் முறையிட, அரசனும் சமணனாகலின், அவரைத் துன்புறுத்தத் தொடங்கினான்.

அரசன் அப்பரை நீற்றறையில் விடுத்தான். அவர் அதனுள் முகமலர்ச்சியோடு சென்றார். அந்த நீற்றறையும் அவருக்கோர் குளிர்ந்தசோலைபோன்றிருந்தது. பின்பு அவருக்கு நஞ்சு கலந்த பாலைக் கொடுத்தான். அப்போதேனும் அப்பர்பெருமான் அஞ்சினாரோ? இல்லை. இல்லை. தன்னெறி உண்மை நெறியென அவர் தெளியத் தெரிந்தாராதலால், எதற்கும் அஞ்சா நெஞ்சினராய் அரசனுடைய ஒறுத்தல்களனைத்தையும் உவகையுடன் ஏற்றார்,

பின்னர் அவரைக் கல்லிலே பிணித்துக் கடலிலே விடுத்தனர். அவருக்கு உறுதியான மனவலிமை யில்லாதிருப்பின் அப்போதேனும் தான் செய்தது தவறென்றும், தன்னெறி பொய்யென்றும் கூறியிருப்பாரன்றோ? நேர் நிலை வழி நின்ற அவர் இதற்கும் அஞ்சினாரில்லை. எம்பெருமான் திருவருளால் கல்லுந் தெப்பமாக மிதந்தது.

துருவன் ஐயாண்டுக் குழந்தையாயிருந்தும் மனத்துணிவுடன் கானகஞ் சென்று அக்காட்டிலுள்ள விலங்குகள் வெருட்டவும் சிறிதும் அஞ்சாது தான் கொண்ட தவநிலையில் மனதைச் செலுத்தினான். எத்துணைத் துணிவு! எத்துணை வீரம்!! பிரகலாதனும் ஓர் அரும்பெரும் வீரனே; ஊரார்

ஆனவரும் தன் தந்தைக்குப் பயந்து அவனிட்ட ஆணைக்கேற்ப இரணிய நாமமே முழங்கி வர, அவன் துணிவுடன் நாராயணா வென்றே மொழிந்து வந்தான் நஞ்சுக்கு அஞ்சினனோ? மதயானை கண்டு மயங்கினனோ? தந்தையின் உருட்டல் மிரட்டல்களுக்குப் பயந்தானோ? மலைமேலிருந்து கீழே உருட்டியபோது மனங்கலங்கினனோ? அத்தகையோனை வீரனென்னது வேறென்னென்று இயம்புவது?

புலவர்களும் வீரராக விளங்கலாம் என்பதற்குப் போதிய சான்று நக்கீரனாரேயாவர். அவர் சிவபெருமான் பாடிய ஒரு பாட்டில் குறைகண்டு கூற, அப்பெம்மான் புலவர் வடிவாகத்தோன்றி வாதித்தும், நக்கீரர் தான்கொண்ட கொள்கையைக் கைவிடாதது கண்டு, அவர்தம் நெற்றிக் கண்ணைக் காட்டினாராம். தாம் மெய்யல்லவென்று கண்ட ஒன்றைத் தமக்குவரும் ஏதம் குறித்தாயினும் மெய்யெனக் கொண்டாரில்லை. "நீர் நெற்றிக்கண்ணைக் காட்டினுலுங் குற்றங் குற்றமே" என வாதித்த அவர்தம் மனச்சான்று என்னே!

இனி, இயேசுநாதரைச் சிலர் தெய்வமாகப்போற்றுகின்றனர். இன்னுஞ் சிலர் அவர் தெய்வமல்லரென்றும், தங்கள் தெய்வத்தைத் தவிர்த்து வேறு கடவுளே கிடையாதென்றுஞ் சாதிக்கின்றனர். அஃது எப்படியாயினு மாகுக.

இயேசுநாதர் கடவுளின் கூறு எனக் கூறப்படுகின்றார். மேலும் அவர் இறந்தவரை உயிர்ப்பித்தல், குருடனுக்குக் கண்ணளித்தல், பிணிவாய்ப்பட்டோரைத் தம் வாய்மொழியாலே பிணி நீக்குதல் முதலிய வியத்தகு செய்கைகள் நிகழ்த்தினாரெனக் கூறப்படுகிறது. அவர் சிலுவையில் அறையப்பட்டு உயிர் போகுந் தருவாயிலிருந்தபொழுதும், பொதுமக்கள் அவர்பால் அலர் தூற்ற அவ்வருந் துயரத்தினும் அவர்களுக்குக் கெடுதி நினைத்தாரல்லர். "எந்தையே! இவர்கள் அறியாமையினால் என்னை இவ்வாறு துன்புறுத்துகிறார்கள். ஆகவே அவர்களைப் பொறுத்தருளல் வேண்டும்," என அவர் பேரிரக்கங்கொண்டு ஆண்டவனை வேண்டுவது நம்மனத்தை உருக்குவதாகும்.

விலங்கு நீர்மைமிக்க கொடியோர் அவரைப்பற்றிச் சென்று பலவாறு அவருக்கு இன்னல் விளைத்தார்கள்; அவர்மீது எச்சிலுமிழ்ந்தார்கள்; கன்னத்தி லறைந்தார்கள்; தலையி லடித்தார்கள்; முட்களால் முடிசெய்து சூட்டி எள்ளி நகையாடினர்; இன்னும் எத்துணையோ கொடுமைக ளியற்

றினர். பின்பு சிலுவையில், ஆணிகொண்டு கையிலும் காலிலும் அறைந்தனர். இத்துணையும் பொறுத்துக்கொண்ட அவர் ஒரு கடுஞ் சொல்லும் செப்பினாரல்லர். கருணைக் கடலாகவும் பொறுமைக் களஞ்சியமாகவும் விளங்கிய அவர் அது போழ்தும், "அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை," என்ற குறளுக்குப் பொருந்திய சான்றாக விளங்கினார்.

தம் பகைவர் உறுத்தல்களுக்குப் பயந்து தாம் மெய்யெனக் கண்டதைப் பொய்யாகக் கொண்டனரோ? தன்னைக் கொல்லும்பொருட்டு வழிதேடும் போழ்தும், 'யான் ஆண்டவனின் திருமகனே,' என்று உறுதியாகக் கூறினார். அம்மாற்றம் என்று வெளிவருமோவென அமயம் பார்த்திருந்த அவர்தம் பகைவர் அவர்மீது குற்றஞ்சாட்டிச் சிலுவையிலறைந்தனர். இறுதிவரை அவர்தாம் கண்ட நெறியினின்றும் பிறழாது ஒரே நிலையின் தலைநின்றார்.

இங்ஙனம் ஒரே நிலையில் தாங்கண்ட உண்மையை நிலைநாட்டுவதில் எத்துணை யிடர்ப்பாடுகள் நேரிட்டபோழ்தும் இவ்வுண்மையினின்றும் வழாது நின்று கருணையே உருவாகவும், பொறுமையே கலனாகவும் பெற்ற இயேசு பெருமானை வீரனென்னாது பின்னை யென்னென்றியம்புவது! வீரனுக்காம் வாய்மை, கருணை, தியாகம், பொறுமை, மனவலிமை ஆகிய இவை அவர்பால் மிளிர்ந்த தன்மையை நோக்கின் அவரை ஓர் வீரனல்லவென்றுங் கூறுதலியலுமோ?

(தொடரும்)

---

## தமிழ்க்கலைச் சொல்லாக்கன் மாநாடு
## இலங்கை உயர்திரு. விபுலாநந்த சுவாமிகள்
# தலைமையுரை

(முன் ௪0௨-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பிறமொழியிலிருந்து எடுத்த பதங்களைத் தமிழில் வழங்குமிடத்து அவைதம்மை எவ்வாறு தமிழாக்கிக் கொள்ளுதல் வேண்டுமென்பதைக் குறித்து ஒருசில குறிப்புக் கூறுவாம். ஒவ்வொரு மொழிக்கும் சிற்சில சிறப்பியல்புகளுள. அவை தம்மை மாறுபடாது பாதுகாத்தல் ஆன்றோர்க் கியல்பு. யாப்பியலிற் கூறிய காசு, நாள், மலர், பிறப்பு எனும் நால்வகை வாய்பாடும்பற்றி நடப்பன, ஓரெழுத்தொரு மொழியும்

ஈரெழுத்தொரு மொழியும், இரண்டிறந்திசைப்பன வனைத்தும் தொடர்மொழியே யாம். அவைதாம் ஈரசை கொண்டும் மூவசை புணர்ந்தும் சீரியைந்திறுவன. ஈரசை மொழிகளே பெருவரவின. மூவசையின் மிக்க மொழிகள் தமிழிற் பயில்வதில்லை. மொழி முதலிலும் இறுதியிலும் நிற்றற்குரிய எழுத்து இவ்வயாமெனவும் இன்ன இன்ன எழுத்துக்களின் முன்னர் இன்ன இன்ன எழுத்துக்கள் மயங்காவெனவும் இலக்கண நூலாசிரியர் வகுத்துக்காட்டி யிருக்கின்றனர். அவர் ஆராய்ந்தமைத்த விதிகளுக்கு இயைவாகச் சொற்களை யாக்கிக் கொள்ளுதல் முறையாகும். உயிருள்ள மொழியானது பிறமொழித் தொடர்புகொண்டு தனக்குரிய சொற்களஞ்சியத்தைப் பெருக்கிக்கொள்ளுதல் வேண்டும். வினையெஞ்சு கிளவி, பெயரெஞ்சு கிளவி, தொகைமொழி, தொடர்மொழி என்றின்னவற்றிற்கு இலக்கண நூலாசிரியர் கூறிய வரம்பினைக் கடைப்பிடிப்பது எவ்வாற்றானும் இன்றியமையாததேயாம்.

வாங்கு, மேசை, கதிரை என்னும் மொழிகள் Bench, Table, Chair என்னும் ஆங்கிலச்சொற்களின் மொழிபெயர்ப்பாக ஈழநாட்டில் வழங்கப்படுகின்றன. இவை போர்த்துகீச மொழியிலிருந்து தமிழில் வந்து வழங்குந் திசைமொழிகளாமென்பதைப் பெரும்பாலார் அறிந்துகொள்வதில்லை. இச்சொற்கள் தமிழுருவுடையவாதலின், வேறுபாடின்றி வழங்கப்படுகின்றன. ஒரேயினப் பொருள்களைக் குறிக்குஞ் சொற்கள் ஒரே விகுதிபெற்று நிற்றலும், முரணிய இனச் சொற்கள் ஒரே வாய்பாட்டால் நடந்து பெரும்பாலும் ஒரேயெதுகையவாக நிற்றலும் தமிழ் வழக்கு. அறம், மறம் எனும் முரணிய வினைச்சொற்கள் ஒரே யெதுகையவாக அமைந்து நிற்றலை நோக்குக. இம்முடிபுகளுக்கு எடுத்துக்காட்டாக "மின்சார சாத்திர வரலாறு" என்னும் பொருள்பற்றி யானெழுதிய கட்டுரையி னொருபாகத்தைப் படிக்கின்றேன்.

"ஊசிக் காந்தத்தினியல்பு மிகப்பழைய காலந்தொட்டுப் பல தேசத்துப் பண்டிதர்களாலும் அறியப்பட்டு வந்து, காந்தக் கோட்டையினருகே சென்ற கப்பலொன்றிலிருந்த ஆணிகளெல்லாங் கழன்று போகக் கபபல் அழிந்து போயிற்று எனக் கூறும் பழங் கதையும் உண்டு. காந்தக் கட்டியினால் உரிஞ்சப்பட்ட இரும்புத் துண்டு காந்தத்தி னியல்பினைப் பெறுமென்பதை முன்னோ ரறிந்திருந்தனர். யவன புரத்திலே மிலேத்துஸ் என்னும் பகுதியில் வதிந்த தாலேஸ் என்பாரொருவர் பொன்னம்பர் என்னும் ஒருவகைப் பிசின்

கையினால் உரிஞ்சப்படின் கடிதத்துண்டு போன்ற பாரமற்ற பொருள்களைக் கவரும் வன்மையைப் பெறுமெனக் கண்டறிந்தனர். பின்னாளிற் பதினேழாம் நூற்றாண்டி னாரம்பத்திலே இலண்டன் பட்டினத்தில் வசித்த கில்பேர்ட் என்பார் ஓராசிரியர் பலவகைப் பொருள்களையும் பரீக்ஷித்ததன் பயனாகக் கண்ணாடி, கந்தகம், முத்திரை மெழுகு, வைரம், கோமேதகம், குங்கிலியம் ஆதிய பொருள்கள் பட்டுத்துணி முதலியவற்றால் உரிஞ்சப்படின், ஒருவகைக் கவரும் சக்தியைப் பெறுமெனக் கண்டுபிடித்தனர். இப்பொருள்களையெல்லாம் பொன்னம்பரைக் குறிக்கும் யவனபுர மொழியினாலே ''எலேக்ரிறிக்ஸ்'' எனக் குறியீடு செய்தனர். இவருக்கு ஒரு நூற்றாண்டிற்குப் பின்பு வாழ்ந்த ஸ்டீபன் கிரே(1670—1736) என்னும் ஆங்கிலேயர் மேற்கூறிய கவருஞ்சக்தி உலோகப் பொருள்களாலான தந்திகள் வழியாக எளிதிற் பாயுமென்றும் பட்டுத்துணி முதலியவற்றினாலே தடைப்படுமென்றுங் கண்டனர். ஆங்கதுபற்றி இவர் பொருள்களை உகைவன (Conductors), தகைவன (Non-Conductors, insulators) என இருதிறப்படுத்திக் கூறினர். [ஊர்தல், உய்த்தல், உகைதல், ஒட்டல், நடத்தல், செலுத்தல் என்பன ஒரு பொருட் சொற்கள்; தகைதல், தடுத்தல், சிறைப்படுத்தல் என்பன ஒரு பொருட் சொற்கள்]. இவர் காலத்தில் வசித்த டூபே (1698—1739) (என்னும் பிராஞ்சியர் உரிஞ்சுதலாற் பிறக்குஞ் சக்தி இருவகைப்படுமெனக் கண்டு அவற்றினை Vitreous கண்ணாடியைச் சார்ந்த) Vemous (குங்கிலியத்தைச் சார்ந்த) என வெவ்வேறு அடை கொடுத்து வழங்குவாராயினர். 1746-ம் ஆண்டிலே பீட்டர்வன் முஸ்சேன் புறாக் என்னும் ஒல்லாந்த தேசத்து ஆசிரியர் லேடன் சால் என வழங்கும் இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். லேடன் என்பது ஒல்லாந்து நாட்டிலுள்ள நகரின் பெயர்; சால் (ஜாடி) ஈங்கு கண்ணாடியாற் செய்த ஒரு பாத்திரத்தைக் குறிக்கும். உள்ளும் புறம்பும் உலோகத் தகட்டினால் மருவப்பட்ட ஒரு கண்ணாடிப்பாத்திரத்தினால் அமைத்தது இவ்வியந்திரம். இதனைப்பற்றிப் பின்னர்க் கூறுவாம். இவ்வியந்திரத்திலிருந்து எழுந்த சக்தியின் தாக்கல் பலருக்கு அதிசயத்தை விளைத்தது. அக்காலத்திலே அமெரிக்க நாட்டில் வாழ்ந்த பெஞ்சமின் விறுங்கிளின் (1706—1790) என்பார் லேடன் சாலிலிருந் தெழுந்த தாக்கலும் (Discharge) ஒளிவீச்சும் (Light effect) மேகத்திலிருந்தெழும் இடியேற்றையும் மின்னலையும் நிகர்த்தலாமெனக் கண்டனர். இவர் மின்னலின் தன்மையைப் பரீக்ஷிக்கக் கருதி உலோகப் பொருளினாலான

தந்தி யொன்றினைக் காற்றாடிப் பட்டத்திற் கட்டி மேலேற்றி ஆராய்ச்சி செய்தார். இத்தகைய ஆராய்ச்சிகளின் பயனாகப் பொன்னம்பர் கண்ணாடி முதலியவற்றை உரிஞ்சுதலாற் பிறக்குஞ் சக்தி மின்னற் கொடியாக மேகத்திற் றோன்றுகிற மின் சக்தியோடு ஒன்றாகிய நீர்மையதே எனக் கண்டறிந்தார். ருபே முதலியோர் கூறியது போல இச்சக்தி இருவகைப் படாது ஒருவகையேயா மெனவும், அது மிகை (Positive) குறை (Negative) என்னும் வேறுபாட்டினாலே இருவேறு நீர்மையதாகிக் கூட்டு (Plus) மின்சக்தி, கழி (Minus) மின் சக்தியென இரண்டாகு மெனவுங் கண்டார். தகைவு செய்யப் பட்ட ஒரு பாத்திரத்தினுள்ள உலோகக் கோலொன்றில் இரண்டு மெல்லிய பொற்றகடுகளைத் தொங்கவிட்டபின் குறித்த கோலினை மின்சக்தி யேறிய ஒரு பொருளினாற் றொட்டாற் பொற்றகடுகள் அகன்று நிற்பனவா மெனக் கண்ட ஹாக்ஸ்பி (1706) என்பார் மின்காட்டி (Electroscope) என்னுங் கருவியை யமைத்தார். ஹென்றி கலேண்டிஷ் (1731—1810) என்னும் ஆங்கிலேயரும் சார்ள்ஸ் அகுஸ்தின் கூலம்ப் (1736—1806) என்னும் பிராஞ்சியரும் மின் சக்தியின் கவர்ச்சி, தாக்கல் என்னு மிவற்றின் அளவுகளைக் கணித் தறியும் மார்க்கங்களையும் கருவிகளையும் அமைத்தனர்.

மேற்குறித்த ஆராய்ச்சிகள் நடந்துகொண்டிருக்குங் காலத்திலே இத்தாலி தேசத்து வைத்திய பண்டிதரான லுய்கி கல்வானி (1737—1898) என்பார் ஒருவகை மீன்கள் மின் சக்தியின் தாக்கலையொத்த தாக்கலைத் தருகின்றனவெனக் கண்டு அப்பொருளைத் தொடர்ந்து விசாரித்து நீர்வாழ் சந்துக்களின் நரம்பு மண்டலங்களை ஆராய்வாராயினார். ஒரு நாள் அவர் ஒரு தவளையின் பின்னங்கா லிரண்டையுஞ் சேர்த்துச் செப்புக் கம்பியிற் கோத்துத் தூக்கியிருந்தார். காற்று வீசத் தவளையின்கால் அணித்தாகவிருந்த இருப்புச் சலாகையிற் பட்டது; பட்டவுடனே அவை தவளை பாயும்போது ஒடுங்கி நிமிர்வது போல ஒடுங்கி நிமிர்ந்தன. நரம்பிலிருந்தே அம் மின் சக்தி தோன்றியதெனக் கல்வானி நினைத்தார். அவர் தேயத்தவரான அலெக்சாந்திரோ வோல்தா (1745-1827) என்பவர் கல்வானி கொண்ட முடிபு சரியன்றெனவும் இரு வேறு உலோகங்கள் ஒன்றினையொன்று தீண்டுவதனால் மின் சக்தி பிறக்கிறதெனவுங் காட்டித் துத்தநாகம் செம்பு என்னும் இவற்றாற் செய்த தகடுகளை ஒன்றின்மே லொன்றாக மாற்றி யடுக்கி அவற்றிடையே உப்பு நீராற் றோய்த்த ஊறுதாள்களை வைத்து அடியிலிருந்த செப்புத் தகட்டோடு மேலே யிருந்து துத்தநாகத்தைச் செம்புக்கம்பியினா லிணைத்து அவற்றின் வழி

யாக மின்னருவி பாய்வதைக் காட்டினார். பல கண்ணாடிப் பாத்திரங்களில் உப்பு நீரை நிறைத்து அவற்றினுள்ளே செப்புத் தகடு துத்தநாகத் தகடு என்னு மிவற்றை நிரைபட வைத்துச் செம்புக்கம்பியினாலிணைத்து மின்னருவிபாயு மியல்புகளைக் காட்டினார். இங்ஙனம் பிறப்பிக்கப்படுகின்ற மின்னருவியானது நீரினை நாரம் அனலம் என்னும் இருவேறு வளிகளாகப் பிரித்துவிடும் என்பதை 1800-ம் ஆண்டிலே நிக்கல்ஸன், கால்லைல் என்னும் இவர்கள் கண்டு பிடித்தனர். 1802-ம் ஆண்டிலே ஸேர் ஹம்பிரிடேவி என்பார் மின்னெகிழ்வு முறையினாலே நீரினைப் பிரித்து அதனிடையேயுள்ள நீரகம் தீயகம் என்னும் இரண்டு வளிகளிலும் இரண்டு பங்கிற்கு ஒருபங்கு விகிதமாக அமைத்துளவாமெனக் காட்டினார்.

மின்சக்திக்கும் காந்தசக்திக்குமிடையேயுள்ள தொடர்பினைக் கண்டுபிடித்த பெருமை டென்மார்க் தேசத்துச் சாஸ்திர பண்டிதராகிய ஹான்ஸ் கிறிஸ்தியன் ஓயர்ஸ்ரெட் (1777-1857) என்பவருக் குரியது. இவர் கொப்பனேஜன் நகரத்துப் பல்கலைக் கழகத்திலே பேராசிரியரா யமர்ந்திருந்தார். கல்வானிமின்னருவித்தொடர் ஒன்றின் மீது இவர் பரீக்ஷை செய்துகொண்டிருக்கும்போது தற்செயலாக ஒரு காந்த ஊசியை மின்னருவி பாயுங் கம்பிக்குச் சமீபமாகக் கொண்டுவந்தார். வடக்குத் தெற்காக நின்ற கம்பி தன்னிலையினின்று விலகியது: அருவிபாயுங் கம்பியை எதிர்த்திசையாகப் பிடித்தார். கம்பி மறுபுறமாக விலகியது.

இந்தச் சோதனைக்கிரியையை ஓயர்ஸ்ரெட் வெளியிடுதலும் புதியதோர் ஆராய்ச்சித்துறை ஏற்பட்டிருப்பதைக்கண்ட ஐரோப்பிய அறிவுநிலையங்கள் இத்துறையை விசாரிக்கத் தொடங்கின. இதனைப் பெருக வாராய்ந்து சிறந்த முடிபுகளைக் கண்டவர் அந்திரேமாரி அம்பியர் என்னும் பிரஞ்சிய விஞ்ஞான சாஸ்திரியார் ஆவார். இவர் 1775-ம் ஆண்டிலே பிறந்து 62-ம் வயதிலே 1836-ல் உயிர் துறந்தார். தொடுத்துக் கணிதசாஸ்திரத்தில் வல்லவராகிய இவ்வறிஞர் ஓயர்ஸ்ரெட் வெளியிட்ட உண்மையினைப் பூரணமாக ஆராய முற்பட்டார். இவர் கண்டுபிடித்த விதி: காந்த ஊசியைப் பார்த்த வண்ணமாக ஒருவன் மின்னருவியோடு நீந்துகிறானென்று வைத்துக்கொள்வோமாயின் ஊசியின் வடகோடி அவனது இடக்கைப் பக்கத்திற்கும் தென்கோடி வலக்கைப் பக்கத்திற்கும் விலகும். மேற்செல்வதன்முன் மின்னருவித் தொடர்களைப் பற்றிச் சில

குறிப்புச் சொல்வது இன்றியமையாததாகின்றது. மின்னருவித் தொடர் முழுவதும் ஒரு வலயமாக அமைந்து நிற்கும்பொழுதுதான் மின்னருவி பாயும். அவ்வலயத்தைத் தொடுத்தலினாலும் வெட்டி விடுதலினாலும் மின்னருவிப் பாய்ச்சலை ஓடவும் நிற்கவுஞ் செய்தல் கூடும். வட்டாகாரமாக அமைந்த செப்புக்கம்பியின் நடுவிலே காந்த சக்தி தாக்கும். அச்சக்தி தாக்கலி னளவு மின்னருவியின் வேகத்தைக் கணிப்பதற்குச் சாதனமாகும். பல சுற்றுக்களாலமைந்த செப்புக்கம்பி நாளத்தினுள்ளே இரும்புத் துண்டினை வைத்தால் அது காந்த சக்திபெறும். உருக்கு நிலைபெறாகிய காந்தமாகும். மின்னருவியின் காந்த சக்தியினாலே அவ்வருவியின் வேகத்தை யளப்பதற்கு அமைந்த கருவி கல்வேனோமானி யெனப்படும். மின்னருவி வேகத்தை யளப்பதற்குரிய அலகு விஞ்ஞான சாஸ்திர பண்டிதருடைய பெயரினால் அம்பியர் என வழங்கப் பெறும். இதைக் குறித்துப் பின்னர்க் கூறுவாம்.

இனி ஜோர்ஜ் சைமன் ஓம் என்பவர் செய்த ஆராய்ச்சிகளைப்பற்றிச் சிறிது சொல்லுவாம். இவர் ஜெர்மானியர். ஏர் லங்கன் நகரத்தில் (1789-1854) பிறந்தார். அனற்பெருக்கமானது ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தினுக்கு ஓடுதலைப் பற்றிய முடிபுகளை 1822-ம் ஆண்டிலே ஜோஸெப் பூரியர் என்பவர் ஆராய்ந்து வெளியிட்டார். குறித்த கால வெல்லையிலே யோடுகிற அனலின் மொத்த அளவு அனலோடுகிற உலோகக் கோலின் எல்லைகளில் ஏற்பட்ட மதுகை வேறுபாட்டுக்கு நேர் விரோதமாகும் என்பது பூரியர் கண்ட முடிபு. ஓம் இம்முடிபைக் குறித்துச் சிந்தித்து மின்னருவியின் பாய்ச்சளவு அவ்வருவி பாய்கின்ற கோலின் ஈரந்தத்திலு மேற்பட்ட மின்மதுகை வேறுபாட்டிற்கு நேர் விகிதமாக அமையும் என்பதைக் கண்டார். இதைக் குறித்து ஓம் செய்த சோதனைகளிலே ஒரே உலோகத்தினா லமைந்து ஒரே கண்ணறையளவுடையவாய்ப் பலவேறு நீளங்களையுடைய தந்திகளின் மூலம் மின்னருவியைப் பாய்ச்சினார். உலோகமும் நீளமும் மாறுபாடற்றிருக்கக் கண்ணறை யளவை வேறுபடுத்திச் சில பரீக்ஷைகளைச் செய்தார். இவற்றின் பயனாகவே அவருடைய நாமத்தினால் வழங்குகிற ஓம் விதி என்பதனைக் கண்டுபிடித்தார். வேறு வேறாகிய உலோகங்கள் வேறு வேறளவாக மின்னருவியை உகைக்கும் என்பது இவரது முடிபு. உகைப்புந் தகைப்பும் ஒன்றினுக்கொன்று விலோமமாவன.

அருவி வேகமானது முடுக்கத்திற்கு நேர்விகிதமாயும் தகைப்புக்கு விலோம விகிதமாகவும் அமைந்து நிற்கும்

தகைப்பு வலயத்தின் தகைப்பும், மின் காலத்தின் தகைப்பும் ஒன்று கூடிய கூட்டுத்தொகையாகும். இவ்விதியைக் கொண்டு மேற்குறித்தவற்றை அளந்தறிதல் கூடும்".

## VI

கலை நூல்களை நாட்டு மொழியிலெழுதும் பெருமுயற்சி இந்தியாவின் பலபாகங்களிலும் நடந்துகொண் டிருக்கின்றது. ஐதராபாத் சமஸ்தானத்தி னாதரவிலே நடைபெறும் ஒஸ்மானியா சர்வ கலாசாலையானது நாட்டுமொழியாகிய உருது பாஷையிலே எல்லாக் கலைதுறைகளையும் பயிற்றுதற்கு ஏற்பாடு செய்திருக்கின்றது. இந்தியாவின் பல பாகங்களிலும் உயர்ந்த விஞ்ஞானக்கலை யாராய்ச்சிக்குப் பொது மொழியாக ஆங்கிலமொழி யமைதலும் ஒவ்வொரு மாகாணத்தினும் ஏழைமக்கள் தாமும் எளிதிற் பயின்று கொள்ளவேண்டிய கலைத்துறைக ளனைத்தும் நாட்டுமொழியி லமைந்து நிற்பதும் பொருத்தமாகும்.

தொகுத்துரைக்கு மிடத்துக் கலை நூல்கள் நாட்டிற் பரவுவதற்கு எவ்வெச்சாதனங்கள் வேண்டப்படுபவோ ஆங்கவற்றைத் தாமதமின்றி ஆக்கித்தருவது அறிஞரது கடனாகும்.

இற்றைக்கு ஒரு நூற்றாண்டின் முன் யாழ்ப்பாணத்திலே ஆங்கிலக் கல்விச்சாலை நிறுவி உயர்தரக் கல்வி பயிற்றுவித்த அமெரிக்க மிஷன் குருமார் செய்த முயற்சியினாலே வெளிவந்த வீசகணிதம், நியாயசாத்திரம், வானசாத்திரம், அங்காதிபாதம், சுகரணவாதம், உற்பாலனம், கெமிஸ்தம் முதலிய நூல்கள் ஒரு குறித்த மரபுபற்றிச் சொற்களை யமைத்துச் செல்லுகின்றன. அம்மரபு நமக்கும் பயன்படுமென்னு மெண்ணத்தினாலே ஈண்டு அதனைத் தருகின்றாம்.

---

### சீனா

சீனா தேசத்தில் சின்கியாங் மாகாணத்தில் முப்பது வயதுக்கு மேற்பட்ட பெண்கள் எல்லோரும் கட்டாயம் படிக்க வேண்டுமென்று அதிகாரிகள் உத்தரவு செய்திருக்கிறார்கள். செல்வர் வீட்டு மாதர்கள் பலர் படிக்கத் தொடங்கி விட்டார்களாம்.

# செய்திகளும் குறிப்புகளும் :
# News and Notes

இராமலிங்க அடிகளாரின் 114-ம் ஆண்டுப் பிறப்பு விழா சென்ற அக்டோபர் 16-ம் நாளிற் சென்னையில் பல விடங்களில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர்தரப் பள்ளிக்கூடத்தில் கூடிய மாபெருங் கூட்டத்தில் பல்லாவரம் சுவாமி வேதாசலம் என்னப்படும் உயர் திருவாளர் மறைமலை அடிகளார் தலைமை தாங்கி ஆற்றிய ஆராய்ச்சிமிகுந்த அரிய சொற்பொழிவு வருமாறு:—

**இன்று இராமலிங்க வள்ளலின் 114-வது பிறந்தநாள் விழா வாகும்.**

ஏறக்குறைய 35 ஆண்டுகளுக்கு முன் இராமலிங்க அடிகளைப் பற்றி, வேண்டிய பகுதியொன்றும், வேண்டாத பகுதியொன்றுமாக இருபெருங் கூட்டத்தார் தோன்றினர். சுவாமிகள் மிகப் பெரியார் என்றும், சிறியார் என்றும் வழக்குக்கள் தோன்றின. இப் போட்டிக் கொள்கைகள் அக்காலத்தில் பலமாயிருந்தன. அப்போது நான் இளைஞனாயிருந்தேன். எவ்வழக்குடையாரிடத்தும் நான் சேரவில்லை. இராமலிங்க அடிகளிடம் எனக்குப் பெரிய நன்மதிப்பு உண்டு. என் ஆசிரியர் **சோமசுந்தர நாயகர்** எனக்கு இப்பெரும் எண்ணம் உண்டாகுமாறு செய்துவைத்தார்.

ஆறுமுக நாவலர் எழுதியிருந்த நூல்களைப் படித்த காலை எனக்கு அருவருப்பே ஏற்பட்டிருந்தது. ஆனால், அதுபோது என் ஆசிரியராயிருந்த நாராயணசாமி பிள்ளை என் மனநிலையைத் திருத்தினார்கள். இலக்கிய இலக்கணங்களை முறையே பயிலாமல் அருள் கொண்டு பாக்கள் பாடிய அருளாளர் இராமலிங்கம் என்பதை என் ஆசிரியர் எனக்குக் கூறி, அருவருப்பை அகற்றிவிட்டார். எனக்குத் தலக்கம் உண்டாயிற்று. ஆனாலும் திரும்பவும் ஆறுமுக நாவலர் இராமலிங்க சுவாமிகளை இழித்துப் பேசவே, எனக்குக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. அவருடைய வரலாற்றைப் பற்றிப் பலர் பலவாறாகக் கூறினார்கள். அவருடைய பாக்களைப் பார்க்கவேண்டுமென்று எனக்கு அவா உண்டாயிற்று. பிறகு, ஒரு நல்ல பதிப்பாக வெளியாகியிருந்த அருட்பாவை வாங்கிப் படித்தபோது, அருட்பாக்களின் உயர்வு தோன்றியது. ஆனால், அப்போதுங்கூட சுவாமியாருடைய பாடல்கள் உயர்வாயிருக்கலாம, அவருடைய வாழ்க்கை சரியா யிருக்காதுபோலும் என்று மனக்குழப்பம் கொண்டேன்.

பிறகு, கிறித்தவக் கல்லூரியின் ஆசிரியராக அமர்ந்தபோது ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரின் பழக்கம் எனக்கு ஏற்பட்டது. அவரிடம் "இராமலிங்கர் உயர்ந்தவரா? தாழ்ந்தவரா? நீங்கள் சொன்

ஞல் சரி'' என்று வினவினேன். அதற்கு நாயகர் பின்வருமாறு கூறி ஞர்கள்:—

''ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் பெரியவர்கள்தாம். இராமலிங்க சுவாமிகளும் பெரியவர்களே. ஆனுல் ஆறுமுக நாவலரவர்களைவிட இராமலிங்க சுவாமிகள் அளவுக்கு மேற்பட்டு உயர்ந்தவர்கள்.''

இதைக் கூறுகிறபோது, ஸ்ரீலஸ்ரீ நாயகரவர்களின் கண்களி லிருந்து நீர் தாரைதாரையாய் ஒழுகிற்று.

பிறகு, நாயகரவர்கள் சிறிது நேரம் சும்மாயிருந்துவிட்டுத் திரும் பவும்,

''அவருடைய அன்பின் சிறப்பை என்ஞல் சொல்லமுடியாது. மாணிக்கவாசகரின் அன்புக்கு அடுத்தபடி இராமலிங்க சுவாமிகளின் அன்பு; இவ்வளவுதான் நான் சொல்ல முடியும்'' என்ருர்.

''ஆஞல் நாவலர் இழித்துக் கூறியதேன்?'' என்று நான் கேட் டேன். அதற்கு நாயகரவர்கள்,

''உள்ளபடியே ஆறுமுக நாவலரவர்கள் இராமலிங்க சுவாமி களை இழித்துக் கூறவில்லை. இராமலிங்க சுவாமிகளின் கூட்டத்தார் தேவார திருவாசகங்களின் உயர்வை அறியாமல் அவற்றைக் குறை கூறிக்கொண்டு திரிந்ததைக் கண்டித்து, அவர்களுக்குத் தேவார திருவாசகங்களின் உயர்வை எடுத்துக் காட்டித் திருத்தவே முயற்சி செய்தார்கள்'' என்று கூறிஞர்கள்.

பிறகு நான் இராமலிங்க சுவாமிகளின் அருட்பாவை ஒழுங்காக முறையே படித்தேன். தேவார, திருவாசகங்களுக்கும், அருட் பாவுக்கும் வித்தியாசமே காணவில்லை. அதன் பின்னர், தேவார திருவாசகங்களென்னும் தெவிட்டா அமுதங்களையீந்த அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர் ஆகிய நால்வரிடத் தும் உள்ள மிகுதியான அன்பு ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளிடத்தும் எனக்கு உண்டாயிற்று.

திரும்பவும் முன்போல இராமலிங்க சுவாமிகளைச் சேர்ந்தவர் களுக்கும் சேராதவர்களுக்கும் கலகம் உண்டாயிற்று. நான் எதிலும் கலந்துகொள்ளாமல் தனித்திருந்தேன். இராமலிங்க சுவாமிகளை இழித்துரைக்கும் கூட்டத்தினர் பெருகினர். சென்னை அன்பர்கள் என்னிடம் வந்து பெரியவர் ஒருவரை இழிவாகக் குறைத்துப் பேசு கையில் அக்குறையைத் தவிர்க்க உதவிசெய்யவேண்டுமென்று கேட் டுக்கொண்டார்கள். அக்காலத்தில் எங்களுக்கு உதவியாக ஸ்ரீ தங்க வேலு முதலியார் அவர்களுமிருந்தார்கள். அப்போது கலகம் மும்முர மாயிருந்தது. பிறகு, எதிர்பக்கத்தார் சொல் மாற்றம் மறைந்து இறை வன் அருளால் இராமலிங்கப் பெருமானின் பெருமை 'குன்றிலிட்ட மணிவிளக்கே போல' நிறுத்தப்பட்டது. அன்றுமுதல் நாளுக்கு நாள் அவருடைய அருட்பாவின் பெருமை பெருகிக்கொண்டே வருகிறது.

—'' ஜனமித்திரன் ''

புத்தகசாலைகளைச் சமூகக் கல்வியெனும் சங்கிலியைப் பிணைக்கும் சக்திவாய்ந்த இணைப்புகளாகக் கருதவேண்டும். புத்தகசாலைகளை வலுப்படுத்தி நல்ல நிலைமையில் வைத்திருப்பதானது ஸ்தல ஸ்தாபனங்கள், முனிசிபல் சபைகள், பிரதேச கவர்ன்மெண்டுகள் முதலியவைகளின் கடமையாகும்.

ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு மத்திய பொதுப் புத்தகசாலையையும், தாலூகாக்களில் அதற்கு உபகரணங்களாகச் சிறு புத்தகசாலைகளையும் நிறுவ முயற்சி செய்யவேண்டும். தாலூகாக்களில் ஏற்படுத்தப்படும் புத்தகசாலைகள் பிரதேச அளவைகளாக இருக்கவேண்டும்; அவை, மேனாட்டில் கிராமாந்தர ஜில்லாக்களில் உபயோகத்தில் இருப்பது போல், சுற்றுப் பிரயாண வண்டிகளை அளிப்பதின் மூலம் சுற்றுப் பக்கங்களிலுள்ள கிராமங்களுக்கும் சிறிய டவுன்களுக்கும் பிரயோஜனப்படும்படி ஏற்பாடுசெய்யலாம். பெரிய நகரங்கள் ஒவ்வொரு டிவிஷனிலும் ஜனாபிமானம் வாய்ந்த புத்தகசாலைகளை ஏற்படுத்தவேண்டும்; இப்புத்தகசாலைகளில் ஜனங்கள் புத்தகங்களையும் பத்திரிகைகளையும் இலவசமாக வாசிக்கும்படியும் சிறிய தொகைகளை டெபாஸிட் செய்பவர்கள் இரவல் வாங்கி வாசிக்கும்படியும் ஏற்பாடுகள் செய்யலாம்.

படிப்பு, பணம், செல்வாக்கு மிகுந்த ஆடவரும் பெண்டிரும் இவ்வியக்கத்தின் உதவிக்கு முன்வரவேண்டும்.

கட்டாயக் கல்வியுடன் அகில உலக புத்தகாலய இயக்கமும் ஏற்படுமானால், இந்தியாவானது மீண்டும் அதன் பண்டைய மனப்பண்பின் புகழ்களைப் பெறுவதுடன், உலகின் தேசங்களில் முற்போக்கும் நவீனமும் வாய்ந்த ஒரு தேசமாகவும் ஆகலாம்.

—டாக்டர் B. V. நாராயணசாமி நாயுடு.

—"ஜனமித்திரன்"

* * *

## தமிழ்க்கலைச் சொல்லாக்கன் மாநாடு

சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தார் செய்துள்ள பணி பாராட்டற்பாலது. சின்னாட்களாக அவர்களோடு உழைக்கும் பேறு எனக்குக் கிடைத்தது. ஊண், உறக்கம் என்பன பற்றிச் சிறிதும் நினையாமல் அவர்கள் ஒவ்வொரு நாளும் நெடுநேரம் உட்கார்ந்து கலைச்சொற்களைக் கருத்தாய் ஆராய்ந்தார்கள். அவர்கள்பால் காணப்பெற்ற ஊக்கத்தை மறக்க முடியாது. சங்கத்தின் பொறுப்பாளர்கள் எத்தகைய தன்னலமும் இன்றித் தங்கடனாற்றி வருகிறார்கள் என்பது எனக்குத் தெளிவாகத் தோன்றிற்று. தமிழ் வளர்ச்சியொன்றே அவர்களது குறிக்கோள். தமிழ்மக்கள் அவர்களை முற்றும் நம்பலாம். அவர்கள் தொடங்கியுள்ள முயற்சி இடையூறின்றி இனிது நடைபெறுமாறு வேண்டிய பொருளுதவி முதலியன செய்யவேண்டுவது தமிழ்மக்கள் கடமையாகும்.

கலைச்சொற்களை ஆக்கல் வேண்டுமென்று சொல்வது பொருத்தாது. தமிழில் சொற்கள் இருக்கின்றன. மேனாட்டுக் கலைக் குறியீடுகளை உணர்த்தும் தமிழ்ச்சொற்கள் தமிழ் மொழிக்கண் உள்ளன. நாம் ஒன்றும் புதிதாய் ஆக்க வேண்டுவதில்லை. இருக்கும் சொற்களைக் கண்டுபிடித்து வழங்கவேண்டுவதே நமது கடமை. தமிழ்மொழியில் கலைச்சொற்காண்டல் என்று சொல்வதே பொருத்தம்.

கலைச்சொற்கள் யாவற்றிற்கும் தமிழ்ச்சொற்கள் காணல் எளிதே. சொற்கள்யாவும் எளிதில் காணப்பெற்று, யாவராலும் வழங்கப்பெறும் என்பது உறுதி.

(திரு. ச. இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சாரமாகிய இது திரு. அருள்தங்கையா அவர்களால் எழுதியனுப்பப்பட்டது.)

## இராஜராஜன் திருவிழா

தஞ்சைப் பெரியகோயில் என்ற பிரகதீசுரன் கோயில் ஏற்பட்ட 927-ம் ஆண்டு விழாவைச் சென்ற வாரத்தில் தஞ்சையில் சிறப்பாகக் கொண்டாடினார்கள். அப்பொழுது பிரகதீசுர சுவாமியுடன், அவர் கோயிலைக் கட்டி முடித்த இராஜராஜ சோழனின் படத்தையும் ஊர்வலமாகக் கொண்டு போனார்கள். சென்னை நகர் நாட்டாண்மைக் கழகக் கல்வித்துறை அதிகாரி திரு. சச்சிதாநந்தம் பிள்ளை அவர்கள் 'இராஜராஜ தேவரும் தமிழ் வாழ்க்கையும்" என்பதுபற்றி அரியதொரு சொற்பொழிவாற்றினார்கள்.

## திருப்பனந்தாள் தமிழ்ப்பரிசு

திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர் காசிவாசி உயர்திரு. சுவாமிநாதத்தம்பிரான் சுவாமிகள் தமிழ்மொழி வளர்ச்சி கருதி சென்னைப் பல்கலைக் கழகத்தினர் நடத்திவரும் தனித்தமிழ்த் தேர்வில் முதல் வகுப்பில் முதலாவதாகத் தேறும் தமிழ் வித்துவானுக்கு ஆண்டு தோறும் ஓர் ஆயிரம் வெண்பொற்காசுகள் பரிசு வழங்கிவருவது தமிழ்நாடு போற்றத்தகும் அருஞ்செயலாகும்.

இப்பரிசை இந்த ஆண்டில் பெற்ற புலவர் உத்தமபாளையம் உயர்தரக் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் வித்துவான் T. சங்குப்புலவர் அவர்கள் எனவறிந்து மகிழ்கின்றேம்.

27-8-'36 தேதியன்று சென்னை பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் (Vice-Chancellor) திருவாளர் Dr. A. இலக்குமணசுவாமி முதலியா அவர்கள் தலைமையில் பேரறிஞர்கள் குழுமிய கூட்டத்தில் துணை வேந்தர் அவர்களாற் பரிசு வழங்கப்பட்டது. அதுகாலை, தானும் கழகத்தினரும் தமிழ்வளர்ச்சியில் கருத்தூன்றி ஆக்கந்தரும் பணிகளை மேற்கொள்ள விருக்கும் நற்செய்தியை வெளியிட்டனர்,

---

## மதிப்புரை :

**திருக்கோவையார் இயல்பு:**—திரு தை. ஆ. கனகசபாபதி முதலியார் அவர்கள் எழுதியது. சென்னை ஜார்ஜ்டவுன் பழனியாண்டிப்பிள்ளை கம்பெனியார் பதிப்பித்தது. விலை அணா 5.

அழகிய இச்சிறுநூல் திருக்கோவையார் இறைநூலேயன்றி அறியாதார் பிறழக்கூறுமாறு சிற்றின்பந் தெரிக்குமோர் இழிநூலன்று என்று நன்கெடுத்து விளக்குவதாகும். மணிவாசகரியற்றிய மணிக்கோவையிலிருந்து சில மணிகளைப் பிரித்தெடுத்து ஒவிய வகையில் விளக்குவதாகும் இச்சிறு ஆராய்ச்சி நூல். இதற்குத் திரு வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் அணிந்துரையெழுதியுள்ளார்கள்.

**மகாபாரத சதகம்:**—சிதம்பரம் நாவலர் கல்லூரி ஆசிரியர் N. கிருஷ்ணமூர்த்தி ஐயர் இயற்றியது. விலை ரூ. 1.

பல அறிஞர்களின் பாராட்டுரையைக்கொண்டுள்ள இந்நூல் மிக விரிவான பாரதகதையைச் சுருக்கி நூறு செய்யுளாகப் பாடப்பட்டதொன்றாகும். ஆசிரியரின் அரிய முயற்சி பாராட்டற்பாற்று.

**உயிரிளங்குமரன்** (நாடகம்)—நவாலியூர் திரு க. சோமசுந்தரப் புலவர் அவர்கள் இயற்றியது. திரு க. வேலுப்பிள்ளை அவர்கள் பதிப்பித்து வெளியிட்டது. எம்மிடங் கிடைக்கும்.

சைவசித்தாந்தக் கருத்துக்களை நாடகமுறையில் அமைத்தற்கெனஎழுந்த இவ்வழகிய நூல் இயன்றவரை பிறமொழிகலவாச் செந்தமிழாலியன்றிருப்பது பாராட்டற்குரியதாகும். இத்தகைய முயற்சியால் வெளிவந்த முதல் நூல் இதுவேயாகும். சைவசித்தாந்தக் கருத்துக்கள் பன்னூடுகளிலும் பல்வகையானும் பரப்பப்படுதல் வேண்டும் என்பது ஆராய்ச்சிவல்லார் முடிபு. ஆகவே அவ் இலக்கு கருதி வெளிவந்துள்ள இவ் வொப்பற்ற நூலைத் தமிழ்மக்கள் ஏற்றுப் படித்து இன்புற்று நலமெய்துவார்களாக.

---

---

Printed by Mr. C. M. Govindarajan, at the The Progressive Printers. Coral Merchant Street, Madras. and Published by Mr. V. Subbiah for The S. I. S. S. W. P. Society, Tinnevelly, Ltd.